உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

வைசியரத்நம்

என்னும்

# வேளாளசூளாமணி

இதனுள்

திருக்கை வழக்கம், சண்முகர் பஞ்சரத்நம்

இவைகளும் அடங்கியுள்ளன.

இது

வேதியர்புரம் போஸ்டுமாஸ்டர்

**N. சிதம்பரம்பிள்ளையவர்கள்**

வேண்டுகோட்கிணைய,

சிதம்பரம்

**சிவ, அ. சாமிநாதபிள்ளையால்**

செய்யப்பட்டு,

அய்யன்பேட்டை மிராசுதாரரும்,

தர்மகுணசீலருமான

**அ. மஞ்சையாபிள்ளையவர்களது**

நன்முயற்சியால்

தஞ்சை ஸ்ரீ வித்யாவிநோதினி அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

இதன் விலை] 1910. [அணா 4.



ஸௌமிய ௵ தை ௴

# முகவுரை.

திருவிளையாடல், வேதத்துக்குப் பொருளருளிச்செய்த படலம்

அருமறை நால்வே ருரைகையால் வருண மாச்சிர மங்களு நான்காந்
தருமம் யாகாதி கருமமு மறையின் றகைமையிற் றோன்றின மறையுங்
கருமநூன் ஞான நூலென விரண்டாங் கருமநூ லிவனருச் சனைக்கு
வரும்வினை யுணர்த்து ஞானநூ லிவன்றன் வடிவிலா வடிவினையுணர்த்தும்

இங்ஙனம் முனிபுங்கவர் திருவாய் மலர்ந்தருளியவாறு நான் மறைவழித்தாய் உலகியற் பல்பொருட் ஜீவாஜீவ பேதங்களுள் பெரும்பாலும் நால்வகைத்தே யென்றும், அவற்றுள் கிடைத் தற்கரியமக்கட் பிறப்பினரும் நான்கு வகையானே தோன்றின ரென்பதூஉம் செவ்வனே விளங்குமன்றோ ? அங்ஙனமாய சதுர் வருணத்தவருள்ளும் உலகுய்யவந்த உத்தம வைசியர்களாம் வேளாண்மாக்களை நூன்முறைவழித்தாய் மரபறிய ஆற்றலற்று பலர் சிலகாலமாக இயல்பாகவே சூத்திரரென்று வழங்கி வரு கின்றார்கள். அன்றியும் வேளாண்மாக்களுட் சிலரை வினவுங்கால் அவர்களும் தாங்களின்ன வகுப்பிற்சேர்ந்தவர்களென்கிற விஷய மறியாதவர்களா யேதோ சிற்சில புகன்றுவருகின்றார்கள். ஆகவே இஃதுணர்ந்தயாம் தற்போதே இவ்வாறுயிருப்பின் பிற்போது பெரும்பாலும் மரபுதிரிபாமெனக்கருதி நமது பூர்வாசிரியர்களின் தீர்மானமாகிய பன்னூற்பிரமாணங்களிற் சிலவற்றை ஆராயப்பு குந்தாம். அங்ஙனம் ஆராய்ந்தறிந்தமட்டில் வேளாளர் வைசிய வகுப்பினரென்றே நன்கு புலப்பட்டது. இதனை யாமுணர்ந்த வாறே நம்மனோரெவரும் அறிதல் வேண்டுமென்னும் அவாக் கொண்டு பன்னூற் பிரமாணங்களோடு குருசிஷ்ய வினாவிடை முறையாகத் தொகுத்து "வேளாள சூளாமணி" யென்றோர் பெயரிட்டு வெளியிட்டனம்.

இதனை விரைவில் வெளிப்படுத்த வேண்டுமென்று சிலநண் பர்கள் தூண்டினமையாலே அவசியம் சேர்க்கக்கூடிய நூற்பிர மாண முதலிய சிலவிஷயங்களை இம்முறை சேர்க்கக்கூடவில்லை; அவைகளை அடுத்த பதிப்பிற்சேர்த்து வெளியிடுவதாக உத்தேசி த்திருக்கின்றேம்.

இங்ஙனம்,

சி. அ. சாமிநாதபிள்ளை.

கடவுள் துணை.

# சிறப்புப் பாயிரம்



## சாத்துகவி.

திருநெல்வேலி வண்ணார்பேட்டை சைவப்பிரசாரகர் மகா-ா-ா-ஸ்ரீ
கோவிந்தசாமிபிள்ளை யென்னப்படும்

### சுந்தரமூர்த்தி பௌராணிகரவர்க ளியற்றியன.

அறுசீர்க்கழி நெடில் விருத்தம்.

பன்னூலும் விதந்தோதும் வைசியவே ளாளரின்மெய்ப் பரிசு காட்டும்
பின்னூலின் முன்னூலே யொன்றினென்று சிறந்தனவாப் பிறங்கிற்றேனு
முன்னூலிற் கடைந்தெடுத்த வைசியாத் தினமென்ன மொழியின்னூலே
யென்னூலிற் பொருள்காட்டு மாடியெனு முன்னூலா யியம்ப லாமே (1)

இத்தகைய நூலதனை யியற்றினவன் யாவனெனி னிருக்கே முன்னு
வெத்தகைய கடவுளரு மேத்தவருள் சிதம்பரத்தி லினிது வாழ்வோன்
உத்தமசீ லத்தனரு ணாசலவேள் பெருந்தவத்தா லுதித்த தோன்றல்
சத்தசத்தி னியல்தெரிந்த பெரும்புலமை மிகுசாமி நாதன் றானே (2)

---

மதுரைத் தமிழ்ச்சங்கத்து மெடல், தோடா முதலிய உயாதர
பரிசுகள்பெற்றவரும், திரிசிரபுரம் S. P. G. காலேஜ்
தலைமைத் தமிழ்ப் பண்டிதருமாகிய

### ம-ா-ா-ஸ்ரீ. மு. வேங்கடசாமிநாட்டாரவர்க ளியற்றிய

அறுசீரடியாசிரிய விருத்தம்.

குழவிமதி யணிவேணிப் பெருமானார் வெண்சங்கக் குழை யார்முன்னைப், பழம்பொருட்கும் பழமபொருளா னவர்புலியும் பதஞ்சலியும் பணிந்து போற்ற, அழகொழுகும் பொன்மன்றத் தைந்தொழிலார் நடம்புரியும் அருமை யேய்ந்த, நிழல்குலவுந் தில்லைவனப் பெருமையினை யாவரே மிழற்றுநீரார். (க)

அப்பெரிய பதியிலரு ணாசலவே டவத்தினவ தரித்த செம்மல், இப்புவியிற் பிறர்கரா ரெனுங்குணத்தனன்னடையனினிய சொல்லன், செப்பரிய திருநீறு கிகழ்படிவனுண்மதியன்சிவன்று ணையன், ஒப்பருவே ளாண்டலைவன் சாமிநா தப்பெயர்கொ ளூரவோனுவான். (உ)

பலந்தருமா றறிவுடைய மக்களினுட் பளகில்மனத் தூய்மை வாய்மை, அலந்தருசெந் நெல்லாலே யுயிர்முழுதும் வளர்க்குமரு ளமையுஞ் சீர்த்திக், குலந்தருநற் காராளர் சரிதம்பன் னூலாய்ந்து குலவத் தீட்டி, நலந்தருவே ளாளசூ ளாமணியென் றொருபெயரும் நவின்றிட்டானே. (௩)

---

திரிசிரபுரம் எஸ். பி. ஜி. காலேஜ் தமிழ்ப்பண்டிதர்

## ம-ா-ா-ஸ்ரீ அ. சுந்தரநாதபிள்ளையவர்களியற்றிய

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

நாமணக்கும் பாமணக்குந் தமிழ்மணக்குங் கழலிறைவர் நடனஞ்செய்யத், தாமணக்குந் தூமணக்கும் பொற்சபைசேர் தனித்தில்லை தனில்வாழ் கோமான், மீமணக்கும் மாமணக்கும் அருணாச லப்பெரியோன் விழைந்த வேள்வி, பூமணக்கும் புகழ்மணக்கும் புத்திரனுப் புவிபிறந்த புனித மேலோன். (க)

பூமினார் மயல்விஞ்சி மடலெழுதப் புகுமழகன் பொருந் தும்வாசக், காமினு ரிந்திரனி னதிகமெனுஞ் சுகபோகன் கடபின் றுமச், சாமிநா தன்கழல்க டமைமறவாத் தமிழ்ப்புலவன் தருநேர் செங்கைச், சாமிநா தக்குரிசில் செந்தமிழால் வினவிடையாத் தரணி போற்ற. (உ)

சீர்பூத்த நிலவிதழிக் கமலவயன் படைத்தருளத் திகழும் மக்கட், கூர்பூத்த குழுவதனுட் குலவியநால் வருணத்துட் குணமார் வேளாண், பேர்பூத்த பகுப்பினர்தஞ் சிறப்புரிமை விரிவனைத்தும் பிறங்க வோர்நூல், நார்பூத்த வேளாள சூளாமணிப் பெயரால் நவின்று னம்மா. (௩)

---

மதுரை மேலமாசிவீதி வித்வான்,

## ம-ா-ா-ஸ்ரீ திருமலைமுத்துப்பிள்ளையவர்களியற்றிய

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

காருரு மலர்ப்பொழிலுங் கஞ்சமலர்ச் செழுந்தடமுங் கவின்செய் தோங்கு, நீருரும் வேணியனார் நடம்பயிலுந் தில்லையுளானிலவும் பூமித், தேருரு மரணைமறவாதமனன் கங்கைகுலன் செல்வியாளன், சீருரும் புயனருணு சலமகிபன் செய்நோன்பிற் சிறக்கவந்தோன். (க)

மலையமுனி வனுமலைய வண்டமிழை யொருங்குணர்ந்த வலவன் கீர்த்தி, நிலையுறவுன் னிடுசாமி நாதனெனப் பெயர்கொண்ட நிபுணன் றேர்ந்தே, அலையுமது கரம்பன்மலர் மதுறுகரும் பான்

மையென வருத்தி யோடு, கலைபலவா ராய்ந்தெடுத்து கற்றவரு மற்றவருங் களிக்கு மாறு. (௨)

புகழ்பெறுமூன் ரும்வருணத் தார்பெருமை துலக்கமிகப் பொருத்த மாகத், துகளறவே வேளாள ரூளாமணியெனநன் னூறுவருந் தூய்மை, திகழ்மணியுங் கோத்ததெனத் தொகுத் துரைத்தா னிதற்கு முன்னந் தேவர் கூடி, இகல்கொடுமைத் தித் தெடுத்த தெள்ளமுதும் நேராகா திடும்பின் னன்றே. (௩)

தஞ்சாவூர் மகர்நோம்புச்சாவடி தர்ம ஸ்கூல் உபாத்தியாயர்

## ம-ா-ா-ஸ்ரீ இராமையாவஸ்தாது அவர்களியற்றிய

### நேரிசை வெண்பா.

மாமேவு வேதாக மங்களையு மாராய்ந்து
தேமேவு வேளாளர் சீர்சரிதம்—தூமேவு
போதம் படரும் புலியூர்வா ழுஞ்சாமி
நாதன்செய் தான்றமிழி னுல்.

## இஃது ஓர் சித்திரகவியாற் செய்யப்பட்டது.

### அறுசீர்விருத்தம்.

சீர்பரவும் வேளாளர் வைசியரென் றோர்நூலைத் திரட்டி யீந்தான்
பார்பரவுந் தில்லையரு ளுசலவே டவத்தினிலுற் பவித்த சீல
னேர்பரவுஞ் செந்தமிழி னியலுணர்ந்தோ னிரக்கமுறு மின்சொல் லாளன்
நீர்பரவு நெடுஞ்சடிலச் சிவபெருமான் றிருவடியை நீங்காத் தொண்டன்

### நேரிசை வெண்பா.

அன்னவன்பே ரோர்கோளோ ராண்டுசிவ னாணனே
ருன்னுமிரா சிப்பெயரோ டோரைந்துஞ்—சொன்ன
முறைபிறழா தேயிருகான் முற்றுமுணர்ந் தக்கான்
மறைபொருளா காதே மதி.

தஞ்சையைச் சார்ந்த தென்பிரம்பூர் தமிழ் முனிஷியார்

## மகா-ா-ா-ஸ்ரீ சொ. நடராஜஐயரவர்க ளியற்றிய

### அறுசீர் விருத்தம்.

சீராரும் வேளாளர் குலப்பெருமை யாவருக்குந் தெளிவாய்த் தோன்ற
பாராரும் வைசியரத் தினமெனுநூ லினையுலகிற் பரிவாய்ச் செய்தான்
பேராரும் புலியூரி லமாருணு சலக்குரிசில் பெற்ற சீலன்
ஏராரும் புலமைநிறை சாமிநா தப்பெயர்கொ ளினிமை யோனே.

## சிறப்புப்பாயிரம்.

தஞ்சையைச்சார்ந்த வெள்ளாம்பிரம்பூர் வித்வான்

மகா-௱-௱-ஸ்ரீ ச. துரைசாமிச்சோழகரவர்க ளியற்றிய

### எண்சீர் விருத்தம்.

குருமுனியுங் குறுமுனிநா னென்று னந்தக்
குமரனுநான் குமரனென்றுன் கோதி லாத
அருமறையா னுன்வெள்ளை யானை னென்று
ளம்பலம்வாழ் வசியனரு ணசலப்பேர்
பெருமையுளோன் றவத்துதித்துக் கலைக டேர்ந்த
பெருந்தகையோன் செய்வசிய ரத்நநூலின்
அருமையையோர்ந் துரைத்தனரேற் கலைக டேர்ந்து
அவனியுளோ ரெவரறைவ ரவன்பேர் கேண்மோ.

### நேரிசை வெண்பா.

சீராரு மூன்றிரண்டுஞ் சேருமொரு பான்மூன்றும்
ஏரா ரிருநான் குடனிரண்டும்—பேராரும்
ஏழொன்றீ ரொன்பான்பே ரெய்தியவ னிந்நிலத்தின்
வாழநீ டூழி மகிழ்ந்து.



இராஜேந்திரம் சாரதாநிலய வித்தியாசாலைக்கதிபர்

ம-௱-௱-ஸ்ரீ. வைத்தியலிங்கம்பிள்ளையவர்க ளியற்றிய

### அறுசீர் விருத்தம்.

நீர்பூத்த புண்டரிகத் தவன்றுடைபூத் தெண்ணன்கு நிலவக் கொங்கை
வார்பூத்த மனையவடன் மாண்பூத்த சிறுவினையின் மருவச் செங்கை
யேர்பூத்த குடிமரபி னெழில்பூத்த சரிதமெலா மெழுதப்பூத்த
பார்பூத்த நூலினையா யிரம்பூத்த நாவினனும் பகரற்பாற்றே. (க)

அத்தகைய வேளாளர்க் கொருசூளா மணியெனுநூ லறையக் கண்டான், எத்திசையும் புகழுடையான் றிருநீறஞ் செழுத்தொடுகண் டிகையே பூண்பன், றத்துவநூ லினையாய்வன் றவந்தூய்மை வாய்மையறந் தனதாக் கொள்ளும், புத்தியினு னமுதெனுமீ குவனெளியோர்க் கின்மொழியே புகலா நிற்பன். (உ)

தாதையரு ணசலனற் றவமெனவூ தாதையருந் தவமே லாகப்
போதமுளா னவருமின் புறநோற்கு மில்லறமே புகுதா நிற்பன்
சீதமதிச் சடையினனு டகமுறமா டகப்பொதுவிற் றிகழுஞ் சாமி
நாதனெனப் பெயருடையா னரியதமிழ்க் கினியநடை நாவ லோனே. (ங)

## அவை யடக்கம்.

கான்மேவும் வரிவேங்கைக் கொப்புறத்தன் னுடலின்வரை காணத்தீட்டித்
தான்மேவும் பூசையெனக் கற்றறிந்தார் போனடித்துத் தாணிமீதே
நான்மேவும் படிவேளாண் மரபினர்வை சியரென்றே நவின்றே னிந்த
நூன்மேவும் வழுவகற்றி யறிஞர்பொரு ளோர்வரென்ற நோக்கத் தானே.

## ரிஜிஸ்டர் அறிவிப்பு.

இப்புத்தகமானது வெகுசிரமத்துடன் அநேக அரியநூலி னின்றும், மற்றும் ஏட்டுப்பிரதியினின்றும் விஷயபெயர்ப்பு மொழிபெயர்ப்புசெய்து அச்சிட்டு கவர்ன்மெண்டாரால் ரிஜிஸ் டர் செய்யப்பட்டிருக்கிறபடியால் மீறி அச்சிடுபவர்கள் தவறாது நஷ்டத்துக்குக் கட்டுப்படுவார்களென்பதை அறியக்கடவர்கள்.

## விலை விவரம்.

இப்புத்தகத்தை மொத்தமாகப்பெற பிரியமுள்ள வியாபா ரிகளுக்கு விலை நயமாய்க்கொடுக்கப்படும். 4 அணா ஸ்டாம்பு அனுப்புபவர்களுக்கு 1-புத்தகம் புக்போஸ்டாக அனுப்பப்படும். அன்றி வி-பி. போஸ்டிலும் அனுப்பப்படும். 5-க்கு ஒன்று கமி ஷனை கொடுக்கப்படும்.

# சிற்றின்ப சாஸ்திர சிந்தாமணி.

இஃது நம்தமிழ்நாட்டுச் சகோதர சகோதரிகளின் சந்தான விர்த்திக் கேதுவாகிய மர்மவிஷயாதிகளுக்குரிய விதிவிலக்கு களைப்பற்றிச் சவிஸ்தாரமாகவும் எளியநடையாகவும் யெழுதி யா வர்க்கும் புலப்படுமாறு வினாவிடையாகச் செய்யப்பட்டுள்ளது.

புத்தகம் 1-க்கு விலை அணா 4. வி. பி-யிலும் அனுப்பப் படும். வியாபாரிகளுக்கு நயமாய்க் கொடுக்கப்படும். 4-அணா ஸ்டாம்பு அனுப்புவோர்களுக்கு 1 புத்தகம் புக்போஸ்டாக அனுப்பப்படும்.

இங்ஙனம்

C. A. சாமிநாதபிள்ளை, வேதியர்புரம், தஞ்சை.



உ

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

வைசியரத்நம்

என்னும்

# வேளாள சூளாமணி.

திருச்சிற்றம்பலமுடையார் துதி.

உலகெலாமுணர்ந் தோதற்கரியவன்
நிலவுலாவிய நீர்மலிவேணியன்
அலகில்சோதிய னம்பலத்தாடுவான்
மலர்சிலம்படி வாழ்த்திவணங்குவாம்.

முருகவேள்துதி.

மாயையின் வலியோனாகி மான்முதலோரை வென்றே
ஆயிரத்தோ ரெட்டண்டம் அரசுசெய்துக நூற்றெட்டுக்
காயமதழி வின்றாகிக் கடவுளர்க் கலக்கண்செய்த
தீயசூர் முதலைச்செற்ற குமரன்றாள் சென்னிவைப்பாம்.

மும்மூர்த்திதுதி.

நிறைக்குரிய வந்தணர்க ணெறிபரவ மனுவிளங்கத்
தறைக்குரிய காராளர் தமதுவரம் பினிதோங்க
மறைக்குரிய பூமனையும் வண்டுளபத் தாமனையும்
பிறைக்குரிய நெடுஞ்சடிலப் பெம்மானை யும்பணிவாம்.

---

## குரு சிஷ்ய வினா விடை

## சதுர்வருண விளக்கம்.

மாணவன் :—வருணம் எத்தனை வகைப்படும் ?

ஆசிரியர் :—நான்கு வகைப்படும்.

மா :—அவை யாவை ?

ஆ :—பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் என்னும் நால்வருமாம்.

மா :—இந்நால்வரும் ஆதியில் எவ்வாறு தோன்றினர்?

ஆ :—பிரமதேவரது முகத்தினின்று பிராமணரும், புஜத்தினின்று க்ஷத்திரியரும், தொடையினின்று வைசியரும், பாதத்தினின்று சூத்திரரும் பிறந்தனர்.

மா :—இவர்கள் இங்ஙனம் பிறந்ததைக் கூறும் சுருதிகள் யாவை?

இருக்குவேதம், புருஷ சூக்தம்.

ஆ :—பிராமணோஸ்யமுகமாஸீத் பாஹூராஜன்ய: கிருத:
ஊரூததஸ்யயத்வைஸ்ய: பத்பியாம்சூத்ரோஅஜாயத

மநு முதல் அத்தியாயம் ருள-வது சுலோகம்.

ஸர்வஸ்யாஸ்யதுஸர்கஸ்ய குப்தியர்த்தம்ஸமஹாத்தியுதி:
முகபாஹூருபஜ்ஜாநாம் பிரதக்கர்மாண்யகல்பயது. என்பனவும் பிறவுமாம்.

மா :—இந்நான்கு வருணத்தார்க்கும் முறையே தொழின் முறை கூறுப.

## சதுர் வருண தருமம்.

ஆ:—பிராமணருக்கு :—வேதம் ஓதல், ஓதுவித்தல், யாகஞ் செய்தல், செய்வித்தல், தானங் கொடுத்தல், வாங்குதல் ஆக ஆறுமாம்.

மநு அஅ-வது சுலோகம்.

அத்யாபனஞ்சாத்யயனப் யஜநம்யாஜனந்ததா
தானம்பிரதிக்கிரஹஞ்சைவ பிராஹ்மணாநாமகல்பயேது.

க்ஷத்திரியருககு :—பிரஜைகளைக் காத்தல், தானங் கொடுத்தல், வேதம் ஓதல், பாட்டு கூத்து ஸ்திரீ முதலான விஷயங்களில் மனஞ்செல்லாதடக்குதல் ஆகிய இந்நான்குமாம்.

மநுஸ்மிருதி அகூ-வது சுலோகம்.

பிரஜாநாம்ரக்ஷணந்தான மிஜ்யாத்யயநமேவச
விஷயேஷ்வபிரஸக்திஸ்ச க்ஷத்திரியஸ்யஸமாஸத:

வைசியருக்கு:—பசுக்காத்தல், தானங்கொடுத்தல், வேதமோதல், பயிர்செய்தல், ஜலத்திலும் பூமியிலும் உற்பவிக்கும் இரத்தினம், நெல் முதலியன வியாபாரஞ்செய்தல், வட்டிவாங்குதல் ஆகிய இவ்வாறும்.

மநுஸ்மிருதி கூ0-வது சுலோகம்.

பசூநாம் ரக்ஷணந்தான மிஜ்யாத்யயனமேவச
வணிக்பதங்குஸீதஞ்ச வைஸ்யஸ்ய கிருஷிமேவச.

சூத்திரருக்கு:—மேற்கண்ட மூன்று வருணத்தார்க்கும் பொறாமையின்றிப் பணிசெய்வதே முக்கியமான தருமமாம்.

மநுஸ்மிருதி கூக-வது சுலோகம்.

ஏகமேவதுசூத்ரஸ்ய பிரபுகர்மஸமாதிஸத்
ஏதேஷாமேவவர்ணாநாம் ஸுஸ்ரூஷாமநஸூயயா.

மா:—இந்நால்வரில் வைசியருக்கு மேற்கூறிப்போந்த மநுவாக்கியங்கள்தவிர மற்ற இருடிகள் ஏதும் ஸ்மிருதிகள் கூறியிருப்பின் அவைகளையும் ஈண்டு விளக்குக.

பராசரஸ்மிருதி ஆசாரகாண்டம் கூகஉ-வது சுலோகம்.

ஆ:—லாபகர்மததாரத்நங் கவாஞ்சபரிபாலனம்
கிருஷிகர்மசவாணிஜ்யம் வைஸ்யவிருத்திருதாஹிருதா.

(இ-ள்) வட்டிவாங்குதல், இரத்தின முதலிய மணிச்சேகரனைசெய்தல், பசுக்காத்தல், உழுது பயிர் செய்தல், கொள்ளல் விற்றல் என்பன வைஸ்யதர்மமாம்.

பிரகஸ்பதி ஸ்மிருதி.

ஸ்வாத்யாயோயஜநந்தானம் பஸூநாம்பாலநந்ததா
குஸீதக்கிருஷிவாணிஜ்யம் வைஸ்யகர்மாணிஸப்தவை.

(இ-ள்) வேதமோதல், வேள்விபுரிதல், ஈதல், பசுக்காத்தல், வட்டியீட்டல், உழவுத்தொழில் செய்தல், பண்டமாற்றுதல் ஆகிய இவ்வேழும் வைஸ்ய தருமமாம்.

யாஞ்ஞவல்கிய ஸ்மிருதி.

குஸீதகிருஷிவாணிஜ்ய பாஸூபால்யம்விஸ:ஸ்மிருதம்.

(இ-ள்) வட்டிவாங்குதல், உழவுசெய்தல், கொள்ளல் விற்றல், பசுக்காத்தல் வைசிய தருமமாம்.

வராகபுராணம்.

*ஸ்வாத்யாயம் யஜநந்தானம் குஸீதம் பசுபாலனம்*
*கோரக்ஷாங்கிருஷிவாணிஜ்யம் குர்யாத்வைஸ்யோயதாவிதி.*

(இ-ள்) வேதமோதல், வேள்விசெய்தல், தானமீதல், வட்டிவாங்குதல், பசுநிரையோம்பல், உழவு; வாணிபம் ஆகிய இவைகள் வைசியதருமமாம்.

மார்க்கண்டேய புராணம்.

*தானமத்யயனம்யக்ஞோ வைஸ்யஸ்யாபி த்ரிதைவஸா*
*வாணிஜ்யம் பஸுபால்யஞ்ச கிருஷிஸ்சைவாஸ்யஜீவிகா.*

(இ-ள்) தானமீதல், வேதமோதல், வேள்விசெய்தல் இம்மூன்றும் வைதிககருமமாகவும், வாணிபம், பசுநிரைகாத்தல் உழவுத்தொழில்செய்தல் இம்மூன்றும் சீவனத்தொழிலாகவும் வைசியன் கைக்கொள்ளக்கடவன்.

மா :—மேற்கூறிய ஸ்மிருதிவாக்கியங்கள் நிற்க தமிழ்ப்புராண ஆதாரங்களுளவேல் அதனையும் ஈண்டு விளக்கிக்காட்டுக.

காளத்திபுராணம் ௪௧-வது அத்தியாயம் உ௯-வது செய்யுள்.

ஆ :—வணிகர்தஞ்செய்திகூறின் மகவினையாற்றலோதல்
உணர்வுடையவர்க்குத்தான முதவல்வேளாண்மையோம்பல்
தணிவில்வாணிகத்தாலீட்ட லானினந்தழைப்பக்காத்தல்
துணிவுறுமிவைமற்றன்னோர் செய்வனதொகையென்னும்.

மா :—இதனால் மேலேகாட்டிய வேதஸ்மிருதி புராணங்களால் தொன்றுதொட்டு இன்றுவரை பயிர்செயல், வியாபாரம், பசுக்காத்தல் என்னு முத்தொழிலையும் விடாது பரம்பரையாக நடத்திவரும் வேளாளர்கள் வைசிய வகுப்பினராகவே இனிது விளங்குகின்றது. அங்ஙனமாயின் சூத்திரராவார் இன்னாரென்பதைத் தக்க பிரமாணங்களால் சாற்றல்வேண்டும்,

# சூத்திர விவரணம்.

## மிராசுமாயிட்டு.

ஆ :—தொண்டமண்டலவரிசை மூவாறுகுடிமக்கள்
சுருதிநாள் முதலாகவே
துங்கமிருநாவிதன் குயவன்வண்ணானே
சொன்னபடி யெழுத்தோமாச்சன்
கண்டகம்மாளர்வகை யைவர்வாணியர்மூவர்
கந்தமலர் மாலைகாரர்
கலைமீதுசாரடோட்டு பாணன்றலைக்கடைக்
காவல்புரி பள்ளிவலையன்
பண்டுமுதலூரான் மறிக்குமிடையன்விருது
பலகூறு வீரமுடையான்
பதினெண்மர்குடிமக்க ளனைவருங்காராளர்
பணிசெய்து பலமுறையையும்
கொண்டுபரிவட்டமுங் கட்டியேவருவரிக்
குவலய மதிக்கவேதான்
கூறியகச்சிவா மேகம்பராலயக்
குமுதத்தி லிட்டவிபியே.

என்றிவ்வாறாக தொண்டமண்டலத்திற் சிறந்த காஞ்சிமாநகரத்து ஏகம்பவாணராலயத்திலே ஓர் அழகிய கற்கம்பத்திலே பண்டுதொட்டின்றுவரைக் காணப்பட்டமை கொண்டும், மற்றும் மேற்கூறிய பதினெண்மரும் தற்சுதந்தரத்தொழிலின்றி மேன்மையரான மூவருணத்தார்க்கும் உதவித்தொழிற்காரர்களாய் இனிதுவிளங்குவதானும் இப்பதினெண்மருமே சூத்திரவகுப்பினராவர்.

மா :—இச்சூத்திரர்கட்கு மேல்வருணத்தாராய வைசியர்கள் ஓரேவகுப்பினராய் விளங்குகின்றார்களா? அல்லது பலவகுப்பினராய் விளங்குகின்றார்களா?

ஆ :—பலவகுப்பினராகவே விளங்குகின்றார்கள்.

மா :—அப்பலவகுப்பினரும் எவ்வெப்பெயர்கொண்டு விளங்குகின்றார்கள்.

## வைசியரின் உட்பிரிவு.

தராசுகொண்டு பொன் வெள்ளி இரத்தினம் இவை முதலானவைகளை வியாபாரஞ்செய்பவர் தனவைசிய செட்டிகளென்றும், ஆநிரையோம்பி உழுதுபயிர்செய்பவர் பூவைசிய பிள்ளைமாரென்றும் பெயர்பெறுவர்கள்.

மா:—இவர்களுள் பூமியில் உழுது பயிர்செய்யும் வேளாளரென்னும் பிள்ளைப்பட்டதாரிகளுக்குச் சிறப்புப்பெயர் யாது?

## வேளாளரின் பூர்வநாம விளக்கம்.

ஆ:—மண்டலபுருடன் செய்த சூடாமணிநிகண்டில் 2-வது மக்கட்பெயர் தொகுதியில், இளங்கோக்கள், மன்னர் பின்னர், இப்பர், எட்டியர், காராளர், வேளாளர் என்னும் இவ்வாறும் பிறவுமாம்.

மா:—இவ்வறுவகை பெயர்க்கும் பொருள் யாவை.

ஆ:—இளங்கோக்கள்:—முதற்பொருளாகிய நிலம், பொழுதிரண்டிற்கும் தலைமைபெற்ற அரசர்போலல்லாது நிலமொன்றற்கே தலைமைபெற் றுள்ளாராதலின் இளங்கோக்களெனப்படுவர்.

மன்னர் பின்னர்:—வேதியரை முதலவரென இடவரைகூறினதுபோல, அரசர்க்கு அடுத்தபடியினராதல்நோக்கி மன்னர் பின்னரென அடையொடும் இடவரையறுத்ததென்க.

இப்பர்:—யாவர்க்கும் இம்மைப்பயனுக்கு உபகாரகாரணங் கொண்டதாலென்க.

எட்டியர்:—ஓர் காலத்தில் அரசனாற் கொடுக்கப்பட்ட தேசவழக்காகிய சிறப்புப் பட்டப்பெயராம்.

காராளர்:—கார் என்பது மழைக்கும், பருவத்தொன்றற்கும் நீர்க்கும் பெயராதலால் அதனையாளுவோர் என்றபடி.

## வேளாளநாம விளக்கம்.

வேளாளர்:—வேளாளரென்னுஞ் சொல், வேளாண்மையென்பதிலிருந்து வந்தது. இதன் சாதாரணப்பொருள் பயிர்செய்

தல், தானஞ்செய்வோன் எனப்படும். அஃதாவது அறுவடை காலத்தில் களத்தில்வரும் சகலருக்கும் மேரை முதலிய கொடுத் தலாலும், அரசர்களுக்கு இரண்டாவதாக நமது தேசத்திய வித் துவான்களுக்கும் மற்றைக் கல்விவான்களுக்கும் இம்மரபினரே பெரும்பாலும் சன்மானங்கள் செய்துவந்ததாகக் கூறும் சரித்தி ரங்களாலும் நன்குபுலப்படும்.

இன்னும் வேளாண்மை என்பது, நன்றி, ஈகை, வேளாண் டொழின்மை முதலிய பலபொருட்குறித்த ஓர் சொல். அஃது வேளாண்டொழிலுடைமையானன்றி ஈகைமுதலிய நற்செய்கை யுடைமைக்கும் உரியதோர் குடிப்பண்பாயிற்று.

இன்னும், வேளாண்டொழில், வேள்-நன்னிலம், ஆள்-உரி மைத்தலைமை, தொழில்-முயன்று முடித்தல்; இதனால் நன்னி லந்திருத்தி சென்னெறிபொங்கப் பைங்கூழ்விளைக்கு முரிமைத் தலைமைத் தொழிலென்னப்படும்.

இன்னும், வேள்-விரும்பப்படுகை, ஆண்டொழில்-ஆண்மை த்தொழில். இதனால் அரசரால் விரும்பப்படும் மந்திரித்தலைமை, சேனைத்தலைமை முதலிய ஆண்மைத்தொழிலுடையோரென்ப தூஉம் அமையும்.

இன்னும், வேளாண் குடிப்பிறப்பினர் ஈகைமுதலிய நற் செய்கைகளின் மிக்காரென்பதற்கு வேறு கூறவேண்டுவதின்று. இவர்கள் குடிப்பெயரே சான்றென்க; அன்றியும் அந்தணர் அர சர் சூத்திரர் முதலியோர் தத்தமக்குரிய ஒழுக்கங்களை நடாத்து தற்கு வேளாண்குடிகளின் உதவி முற்றும் வேண்டியிருத்தலின் இவர் நெறி பெருநெறி யென்பதற்கு மஃதே சான்றென்க.

### திருஞானசம்பந்தசுவாமிகள் தேவாரம்.

வாளார்கண்செந்துவர்வாய் மாமலையான்றன்மடந்தை
தோளாகம்பாகமாப் புல்கினான்றொல்கோயில்
வேளாளரென்றவர்கள் வள்ளன்மையான்மிக்கிருக்குந்
தாளாளராக்கூறிற் றுன்றோன்றிமாடமே.

**திருவள்ளுவதேவர் குறள்.**

தாளாண்மையென்னுந் தகைமைக்கட்டங்கிற்றே
வேளாண்மை யென்னுஞ்செருக்கு.

(இ-ள்) தாளாண்மை என்னும் தகைமைக்கண் தங்கிற்று. முயற்சியென்று சொல்லப்படுகின்ற உயர்ந்த குணத்தின்கண்ணே நிலைபெற்றது. வேளாண்மை என்னும் செருக்கு எல்லார்க்கு முபகாரஞ்செய்தலென்னும் மேம்பாடு எ-று.

இதனால் மேற்கூறிய இருவைசியர்களினும் உழவர், மேழியர் என்றழைக்கப்படும் பயிர்செய் வேளாண்மாக்களே மிக்கதோர் மேம்பாடுடையாரென்று உள்ளங்கை நெல்லிக்கனியென செவ்வனே விளங்குகின்றதென்க.

மா.—ஆயின், ஏனைய கீழ்மக்களுட்சிலரும் (அதாவது பதினெண்வகை ஏவற்றொழிற் சூத்திரர்களும்) தம்முள் பயிர்செய்தல், வியாபாரம், பசுக்காத்தல் முதலியன செய்துவருகின்ற காரணங்கொண்டு அவர்களையும் ஏன் வைசியவகுப்பினராய வேளாளரென்று கூறவொண்ணாது?

## வைசியதொழில்கொண்ட சூத்திரர் வைசியராகாரெனல்.

---

ஆ.—வைசியராம் வேளாளமரபினர், இற்றன்று; பன்னெடுங்காலமாகப் பிறவியினியற்கைபற்றிப் பரம்பரையாக வேளாண்மைக்கு ஏதுவான தாளாண்மையையே தங்கட்குரிமையெனக்கொண்டு, காலவேறுபாடு, இடவேறுபாடு, செயல்வேறுபாடு என்பனவற்றால் சிறிதும் மாறாது ஒரே நிலைமைத்தாய் வாழ்ந்துவருகின்றனர். சூத்திரர்களோவெனில், தாங்கள் தங்கள் இயற்கைத் தொழிலாய மேல்வருணத்தார்க் கேவல்புரிவதை சிற்றுணர்வால் இழிவெனமதித்துக் காலவேறுபாடு, இடவேறுபாடு, செயல்வேறுபாடு முதலிய நவீனசங்கற்ப விகற்பங்களால் இயன்றவாறு சமயம்நேர்ந்துழி பற்பல தொழிலுரிமையைச் சாதித்து உடலோம்பலொன்றையே கடைப்பிடித்து, வந்த வகுப்பிற்கேற்ற வான்முறை பிறழ்ந்துழல்வது நோக்கி இவர்களை வேளாண்மாந்தரென்று கூறல் எட்டுணையும் பொருந்தாதென்க.

மா:—இத்தகைய சீருடைச்செல்வர்களாய வேளாண்மாக்களுக்குப் பசுக்காத்தல் வந்தவாறென்னை?

# பசுக்காத்தல் வைசியர்கட்குப் பண்பேயென்பது.

ஆ:—பசுக்காத்தல் உழவுக்கு இன்றியமையாததாயிருக்கின்றது. எங்ஙனமெனில், எருதுகள் ஏருக்கும் பசுக்கள் பாலுக்கும் *நிரையாக்கலுக்கு முக்கியமானவையாம். இதன்றி கொம்புள்ள மிருகங்களெல்லாம் விளைநிலத்தின் எருவிற்காகவும் கிருஷியந்திரங்களைப்போல உழவுக்கு அத்தியாவசியமென்பதும் சொல்லாமலே விளங்கும்.

மா:—நிற்க; வைசியராம் வேளாளகுடிகட்கு ஏதும் வேறு நாமங்கள் உளவோ?

ஆ:—உள.

மா:—அவை யெவை?

ஆ:—தேசகால பேதங்களின்படி வேளாளர்கட்கு பிள்ளைகள், முதலிகள், செட்டிகள் எனவும், வடக்கிலும் வடமேற்கிலும் வெலமரேனவும் வழங்கப்படும். இதற்குப்பிரமாணம் வருமாறு

# பிள்ளைப் பட்டப்பேருரை.

சேக்கிழார் புராணம்.

இமயமலையரையன்மகடழுவக்கச்சி யேகம்பர்திருமேனிகுழைத்தஞான்று, சமயமவையாறினுக்குந் தலைவிக்கீசர்தந்தபடியெட்டுமுக்கீராழிநெல்லும், உமைதிருச்சூடகக்கையால்கொடுக்கவாங்கி யுழவுதொழிலாற்பெருக்கியுலகமெல்லாம், தமதுகொழுமிகுதிகொடு வளர்க்கும்வேளாண்டலைவரை, அவ்வம்மையார் தம

*நிரை—பசுமந்தை.

து அருமைத்திருவாக்கினுற் பிள்ளைகளே! யெனவழைக்கப்பட்டமைகாரணமாக அது பட்டப்பெயராயிற்று.

புராணசாரத்திரட்டில்,

மனிதரிற்றேவராதலின் முதலாம் வருணர்தாமையரேயாதி, இனியபேரதுவும் வேந்தர்மண் விளக்குமியற்கையானிராசரே யெனவும், புனிதைசிர் காமபீடத் தெம்மன்னை புதல்வராய் ரென் முதல் பெற்றுத், தனியறமதலை யாதலான் வேளாண்டலைவர்தாம் பிள்ளையேயெனவும்.

---

## முதலியார்பட்ட மூதுரை.

---

சீரொன்றுதேவர்முகலாதலாற் றில்லைவாழ்முதலி
யாரென்றுநாமம்படைத்தது போன்மற்றவருமந்தப்
பேரொன்றுபெற்றதுவேளாண் முதன்மையைப்பெற்றலவோ
வாரொன்றுபூண்முலையா யெளிதோதொண்டமண்டலமே.

அருண்மொழித்தேவராகிய சேக்கிழார் பெரியபுராணஞ் செய்து அரங்கேற்றியகாலத்து சோழராஜன் முதலியபெரியோர்கள் சேக்கிழார் வரவுநோக்கி மிகவியந்து அன்புமீதுற "எம்முதலிகளோ" என்ற காரணத்தால் அது பட்டப்பெயராயிற்று. முதலி-முதன்மையாதலையுடையவன் என்றபடி.

செட்டிகள்:—செட்டுத் தன்மையையுடைய வியாபாரஞ் செய்தலால் செட்டிகளென்னும் பட்டப்பெயர் வந்தது. என்க.

---

## வேளாண் மாந்தரது பூர்வபட்ட விவரணம்.

---

மேற்கூறிப்போந்த மூவகைச்சிறப்புப் பட்டப்பெயர்கள் வழங்கத்தலைப்பட்ட காலத்துக்கு முன்னே நிலத்துரிமை, வைசியராகிய வேளாளர்க்குடைமையால் அதுகாரணமாக "கிழார்" என்

னும் பட்டப்பெயரும் வழங்கிற்றென்க. கிழார் என்பதன்பொருள் உரிமையாளர் என்பது. (கிழமை—உரிமை) இங்கே அக்கிழமையென்னும் பண்புப்பெயர் இறுதி மை விகுதியும் இடைஅகரவுயிருங்கெட்டு ஆர் என்னும் உயர்திணைப் படர்க்கைப்பன்மை யீறுபுணர்ந்து கிழார் என முடிந்ததென்க.

## கிழார்பட்டம் வழங்கிய காலம்.

இப்பட்டப்பெயர் பன்னெடுங்காலத்துக்கு முன்பே வழங்கிவந்ததென்க. என்னெனில், கடைச்சங்கவாணர்கள் நாற்பத்தொன்பதின்மருள் கூடலூர்க்கிழார், அரிசிற்கிழார், சேக்கிழார், பாக்கிழார் என்பாராலும் இனிதுவிளங்கும். இவ்வுண்மை யுணராத போலிமாந்தர் சிலர் அழுக்காறு முதலிய காரணமாக வேறுபொருள் கூறியும் புலம்பாநிற்பர். ஆகவே இவ்வேளாள வைசியர்கட்கு உரிமைபயக்கும் கிழார்பட்டம் 2500 வருடங்கட்கு முன்னமிருந்ததென்றும், வேளாளரும் அவ்வளவு பூர்வ காலத்திருந்தே வருகின்றார்களென்றும் இனிது விளங்குகின்றது.

மா:—இனி இவ்வைசிய வேளாளமாந்தர்கட்கு மேற்கூறிய பல்வகைப்பட்டப் பெயர்கள் பூர்வம் வழங்கியிருக்க இப்போது பெரும்பாலும் அவைமறைந்து செட்டியார், முதலியார், பிள்ளைமார் என்னும் இம்மூன்று நாமங்களே மிகுத்தும் இவற்றுள்ளும் முதலியார், பிள்ளைமார் என்ற பட்டங்களே விசேடமாயும், இவ்விருவருள்ளும் பிள்ளைப்பட்டதாரிகளே மிக்குடையாராயும் காணப்படுகின்றதே; இதனால் அப்பிள்ளைப்பட்டத்துக்கு ஏதோ ஓர் விசேடமிருக்கவேண்டுமென நினைப்புறுகின்றேன்.

## பிள்ளைப் பட்டப் பெருமை.

ஆ:—ஆம், நீர் நினைத்தபடி விசேடமுண்டு. பூர்வம் சீர்காழியென்னுந் திவ்யக்ஷேத்திரத்திலே சிவபாதவிருதயர்க்கும் பக

வதியார்க்கும் தவப்பயனுயவதரித்த ஸ்ரீஞானசம்பந்தசுவாமிகள் தமது மூன்றும்வயதிலே பிதாவோடு சிவகெங்கையையடைந்து ஆங்கே தம்மைத் தீர்த்தக்கரையினிறுத்திப் பிதா ஸ்நானஞ்செய்து எழுமுன் தம் பரமபிதாவாகிய சிவபெருமானைவிட்டு நீங்கி நெடுநாளாயிற்றென்னுங் கருத்தோடு தோணியப்பராலயத்தை நோக்கி யழாநிற்க, அஃதுணர்ந்த ஸ்ரீ சிவபிரான் பார்வதிதேவியாரோடும் இடபாரூடராயெழுந்தருளி அவரையடுத்து பார்வதிதேவியாரை நோக்க, உடனே அவ்வம்மை பிள்ளையாரது அழுகைக்காற்றுது திருவுளமிரங்கி பொற்கிண்ணத்திலே திருமுலைப் பாலைக் கறந்து ஞானமிர்தமுங்கூட்டி யூட்டியஅப்பரமதயாளுவே ஓர்கால் காஞ்சி காமகோட்டத்திலே காமாக்ஷி யென்னுந் திருநாமத்தளாய் அறுசமயத்தாரும் உடலோம்பற் காரணமாகத் தமதிறைவரால் தந்தருளப்பட்ட எட்டுமெக்கிராமி நெல் விரையையும் பெற்று ஆண்டுள்ள வேளாண்மாக்களை நோக்கி எமதருமைப்பிள்ளைகாள்! நீவீர் இதனைப்பெற்று உழவுத்தொழிலாற்பெருக்கி உலகுயிர்க்குமுதவிநீவிரும் உய்யக்கடவீர்கள் என்றருளிச்செய்த திருவாக்கினுற் கிடைத்தபிள்ளைப் பட்டமன்றோ! ஏ மாணவ! இதன்பெருமை யாவரறிவார்; எவர்க்குக்கிடைக்கற்பாலது! இத்தகையபெருஞ் சிறப்புவாய்ந்த இப்பிள்ளைப்பட்டம் நமது பரமகருணாநிதியாகிய அருளன்னையாரது அருமைத்திருவாக்காலழைக்கப்பட்டமையானே ஏனையோரால் தந்த பல்வகைப்பெயர்கட்கும் மேம்பாடாய் விளங்கியோங்குகின்றது. இதனானே மத்தியகாலத்திற்றோன்றிய நவீன கீழ்க்குடிச்சாதியாருட் சிலர் அந்தோணியாபிள்ளை, அதிசயம் பிள்ளை, பாக்கியம்பிள்ளை முதலியனபோன்றும், மற்றும் சங்கரஜாதியர்களிற் சிலரும் தங்கடங்கள் ஈனஜாதித்தன்மையை யொளிக்குமாறு இவ்வருட்பட்டத்தைத் தரித்துக்கொள்கின்றார்கள். இவர்கள் இங்ஙனம் போலிப்பட்டத்துக் காசைகொண்டதாலன்றோ உண்மையறியாச்சாமானிய உலுத்த புத்தியினர் "சாதியில் கெட்டவன்வேளாளன் கழியில் கெட்டது கத்தரிக்கா" யென்பர். ஆயினும் இஃது நம் புராதீன எதார்த்த வைசிய வேளாளர்களை ஒருபோதும் சாராதென்க.

மா :—அறிந்தனன்; ஆயினும் இவ்வேளாண்மாக்கள் இத் தகையினரென்பதைப்பற்றி ஏனைய தொல்லாசிரியர்களால் சொல்லாநின்றுளதேல் தயவுகூர்ந்து ஈண்டு எடுத்தோதப் பிரார்த்திக்கின்றனன்.

தொல்காப்பியம் மரபியல்.

ஆ:-“வைசியன்பெறுமே வாணிபவாழ்க்கை” எனவும், “மெய் தெரிவகையி னெண்வகையுணவின் செய்தியும் வரையாரப்பாலான” எனவுங் கூறியதொழியாது “வேளாண்மாந்தர்க்குழுதூணல்லதில்லெனமொழிப பிறவகைநிகழ்ச்சி” எனவுங் கொடைமடக்காரணங்காட்டி ஆசிரியர் தொல்காப்பியனாரும் விதந்தனரென்க.

---

# வேளாளரது சிறப்பியல்.

---

## திருக்கை வழக்கம்.

ஆதுலர்க்குச்செம்பொனளிக்குங்கையாகமங்கள்
வேதப்புராணங்கள்விரிக்குங்கை—நீதிநெறி
மானங்குலங்கல்விவண்மையறிவுடைமை
தானந்தருமந்தழைக்குங்கை—யானதமிழ்
கல்லார்களென்னுமல்கற்றோர்களென்னுமல்
எல்லாரையுங்காத்தீடேற்றுங்கை—வல்லமைசேர்
மைம்மாமுகிலுலகைவாழ்விக்குமேன்மைபோல்
கைம்மாறிலாதளிக்குங்கற்பகக்கை—சும்மையா
ஊருணிநீர்போலுலகத்தவர்க்கெல்லாம்
பேரறிவாலீயும்பிரதாபக்கை—பாரில்
உடுக்கையிழந்தவன்கைபோலவாங்கே
கொடுக்கவிசைந்தருளிர்க்கை—யிடுக்கணினல்
மாமறையோர்மன்னரொடுவெந்தடுத்தரூத்திருந்
தாமலேயாமற்கொடுத்துத்தாங்குங்கை—தேமருவும்
பொன்முடிமன்னர்புனையத்தரிக்குங்கை
யன்னர்துலாபாரத்தளக்குங்கை—நன்னயத்து என்றபடி.

இஃதன்றியும் குலோத்துங்கமகாராஜன் கம்பரைச் சீறிய போது அவர் கொடுத்திருந்தவிருதுகளைச் சபையின்கண்ணே அவிழ்த்துவைத்து, ஏ ராஜனே! "உம்மைக்கண்டுதானே தமிழ்ப்பாடலைப்பாடினேன்; வேளாளரைப் பாடியவாயால் வேந்தரைப் பாடுவதில்லையென்பது என் சங்கேதமென்று உமக்குத்தெரியாதா" என்றார். இதன்விரிவு புலவர்பிரதாபங்கூறும் விநோதரசமஞ்சரியிற்காண்க.

மா :—அறிந்தேன்; இக்கம்பர் இப்பெற்றியுடையவர் என்பதை எனக்குக் கிருபைகூர்ந் தருள்வீர்களாக.

---

## கம்பர் சரித்திரச் சுருக்கம்.

---

ஆ :—கம்பர் ஏறக்குறைய 1000த்துச் சில்வான வருஷங்களுக்கு முன்னே திருவழுந்தூரிற்பிறந்து எளிமையினால் வெண்ணெய் நல்லூர்ச் சடையப்பமுதலியார் வீட்டில் வளர்ந்து மாடு மேய்த்தற்றொழில் செய்துவந்தனர். ஒருநாள் இவர் வயிரபுரமென்னும் ஊரில் கம்புந் தினையும் விதைத்த வயலைக்காத்திருந்து 15 நாழிகைக்குமேல் நித்திரைபிறந்து அருகிருந்த காளிகோவிலிலுறங்கினர். பின்பு தினைப்புனத்தைக் குதிரைமேய்வதாகக் கனாக்கண்டெழுந்துபோய்ப் பார்க்கவே அங்ஙனமே மேய்ந்துகொண்டிருந்தது. அதுகண்டு குதிரையை அதட்டியும் போகாமையால் மீளவும் அக்கோவிலெதிர்சென்று அழாநிற்க, காளி உள்ளமிரங்கிப் பீஜாக்ஷரத்தை நாவிலேஎழுதிப் பிரசாதிக்கவே சரஸ்வதி வரம்பெற்று ஓர் கவிபாடிக் குதிரையைக்கொன்றும், மீளவும்அக்குதிரை அவ்வூர் அதிகாரியாகிய காளிங்கராயனுடையதாதலால் யாவருங் கேட்டுக்கொண்டபடி அக்கவியின் ஈற்றடியை மாற்றிப்பாடி உயிர்ப்பித்தனர். இதையறிந்த சடையப்பமுதலியாரும் துங்கனென்னும் சோழராஜனும் அவன் மகனாகிய குலோத்துங்கசோழனும் விசேஷமாகச் சன்மானித்துவந்தனர். அதன்பின்னர் முதலியாரும் அரசனுங் கேட்டுக்கொள்ள இராமாயணம்பாடித் தில்லை மூவாயிரவர் முதலியோர் கை

யொப்பமும்பெற்று ஸ்ரீரங்கத்தில் ஸ்ரீ ரெங்கநாதர் சந்நிதியில் அரங்கேற்றி வாழ்ந்திருந்தனர் என்பதாம். பின்னுங்கேட்பாய்

பாணியிற்கங்கைநதி மலையினிற்கைலைமலை
பாரமுகினிற் றண்டகம்
பழமொழியிலௌவைசொல் லரசரிற்சேரமான்
பத்தியிற்சிறியதொண்டன்
காணியிற்றொண்டையாம் புகழில்வேளாளர்புகழ்
கான்முளையினிற்பகிரதன் என்பதனாலும் இனிது

விளங்கும். நிற்க; அரசர்களைப்போல இவர்கட்குத் தசாங்க முதலிய விருதுகளுமுண்டு. அவைவருமாறு காண்க:—பெயர் வேளாளர், மலை-மகம்மேரு, ஆறு-கங்கை, நாடு-எகூ, நகர்-999 வாகனம்-ஐராவதயானையும், உச்சைச்சிரவக்குதிரையும், மாலை செங்குவளை, கொடி-மேழி-சிங்கம்-குயில் படை-கலப்பை, முரசம் கொடை. இதற்குச் செய்யுட்பிரமாணம் வருமாறு காண்க:—

புராணசாரத் திரட்டு.

நெடுநீர்வேலிப்புரவிபோர்த்த
மன்னுயிரெவைக்குநன்னயத்துதவுங்
கொடைமடங்குறித்தகொள்கையராதலின்
வேளாளரென்னவியத்தகுபெயரும்
வருணமாச்சிரமம்வகையுளித்தாங்கி
திருநிலநிலைத்தலிற்றிகழ்மேருமலையும்
நல்குரவொழியப்பல்வளம்பரப்பி
அறங்கடைநிறுத்தியனைத்தையும்புனிதஞ்
செய்தலிற்கங்கைத்திருப்பேர்யாறும்
கோடாமரபின்வாடாவகையின்
மன்னரைக்காக்குநாடெழுபானென்பதும்
அன்னவர்க்காக்கமுன்னியநகர
மொன்றொழியாயிரமென்றது,மிந்திரற்
கின்முகிலூர்திதந்ததூஉமன்றி
அமுதவன்குடிபெறத்தமரவாரணமுன்
கடைதரவோடதிகவின்பெறவளிப்ப
நாரணனிசைத்தவெள்வாரணங்குரகத

ஹூர்தியுந்தொழிற்றிறமுறுகளங்கருவித்
தாவறக்காட்டுந்தனிக்குறிகொடியாஞ்
சிங்கங்குயிலொடுதிகழ்தருமேழியும்
பொழுதளவறுக்கும்விழுமியகுறியிற்
றிங்கணேர்மலர்ச்செங்குவளைத்தாரும்
கலிப்பகைதெறுபடையலப்படையாகவும்
ஆதுலர்விளிக்குமருட்கொடைமுரசுமெனச்
சீரியற்றசாங்கமார்கலியுலகத்து
வானவர்மன்னர்வரிசையின்வழங்கத்
தம்மியல்விளங்கவம்மூன்றும்வருணர்
செம்மைசீரொன்றேதிகழ்ந்தவெங்கணுமென என்றபடி.

## வேளாளர்க்குநிறுத்தலளவைப்பூர்வீக சுதந்தர மென்பது.

துலாபாரம் புராணசாரத்திரட்டு.

அண்டவடுக்குப் பலநிறுக்கு மந்தணுள ஞலடிச்சீ
கண்டன் மறைக்கோவண நிறுத்து முன்னம் பின்னுங் காசினியில்
மண்டுபுகழான் புரூரவனும் மன்னன் வாஞேர் மகட்புணர்தோம்
விண்டுபோகத்துலைபுகுத்திநிறுத்தார்வேளாண்மைந்தர் தம்பேர்.

என்னுமிச்செய்யுளான் வேளாளர் பண்டைக்காலத்தும் நிறுத்தல் முகத்தல் முதலிய அளவைகளைத் தமது சுதந்தரத்திலே யுடைய கௌரவமான வர்த்தகக் கூட்டத்தினராயும் வாழ்ந்து வந்ததாகவே தெரியவருகின்றது. இன்னும்,

## சோமசுந்தரபாண்டியர்க்கு வேளாளர் மகுடஞ்சூட்டினரென்பது.

மதுராபுரியிலே அநாதியாய் விளங்கும் ஒப்பருங் கடவுளாகிய ஸ்ரீ சொக்கலிங்கப்பெருமானது திவ்ய திருக்கோலமென்று

சொல்லப்பட்ட சோமசுந்தர பாண்டியனென்னு மரசனுக்குப் பட்டாபிஷேகஞ்செய்தகாலத்தில், அவர்க்கு யாவர் முடிசூட்டத் தக்கவர்களென்னும் விசாரம்வந்தபோது, பலவகையாராய்ச்சியாலும் மக்களுயிர்க்கு உறுதித்துணையாகவிருக்கும் வேளாளருள் ஒருவர் அம்மகோற்சவத்தை நிறைவேற்றத்தக்கவரென்று யாவராலுஞ் சம்மதிக்கப்பட்டதென ஆலாஸ்யபுராணத்தால் ஏற்படுகின்றது.

மாண :—அறிந்தனன். இந்தவைசிய வேளாளருக்கு மேலவர்களான பிரம்ம, க்ஷத்திரியர்களென்னும் இருவருணத்தாரையும் விட்டுச் சாதாரண உழவர்களை ஏன் அவ்வாறு முடிசூட்ட உத்தேசித்தனர்? இதற்கு ஏதும் காரணமிருந்தல்வேண்டுமென நினைக்கின்றேன். அங்ஙனமிருப்பின் தயைசெய்யவேண்டும்.

---

# வேளாளர் மகுடஞ்சூட்டும் விசேடம்

---

ஆசி :—கூறுதும்,- வைசியரென்னும் வேளாளமரபினர் பிரமனது தொடையிற் றோன்றியதால் அரசாக்ஷிக்கு உறுதி செய்யத்தக்கவர்களென்கிற காரணத்தாலும், மற்றும் பிரம்ம க்ஷத்திரிய சூத்திரர்கள் பரதந்திர ஜீவிதரானமைகொண்டுமே அவர்களைவிட்டு சுதந்திர ஜீவிதர்களான வைசிய வேளாண்மாக்களை விரும்பினரென்க.

பூர்வம் ஸ்ரீராமபிரானுக்கு மகுடாபிஷேகஞ் செய்தபோது வேளாண்டலைவராவாரொருவர் அம்மகுடத்தினை எடுத்துக்கொடுக்க வசிட்டரேற்று முடிசூட்டினதாகக் கம்பராமாயணத்தானும் இனிது விளங்குகின்றது.

கம்பராமாயணம்.

அரியணை யனுமன்றாங்க வங்கதனுடை வாளேந்தப்
பரதன் வெண்குடை கவிக்க விருவருங் கவரிவீச
விரைசெறி குழலியோங்க வெண்ணெயூர்ச்சடையன்றங்கள்
மரபுளோர் கொடுக்கவாங்கி வசிட்டனே புனைந்தான்மௌலி

மாண :—ஐய, சாற்றிய துணர்ந்தனன். பூர்வம் சற்றேறக்குறைய 2500 வருஷங்களுக்கு முன்னே விளங்கிய கடைச்சங்கமிருந்து தமிழாராய்ந்த பொய்யடிமையில்லாப் புலவர் குழாங்களுள் ஒருவராய தெய்வப் புலமைத் திருவள்ளுவனார், எம்மதத்தார்க்குஞ் சம்மதமாயும், எச்சாதியாருமெச்சாநின்ற உச்சிதமாய் அருளிச்செய்த திருக்குறட்பொதுமறையுளே ஏதும் இவ்வேளாண்மாக்களைச் சிறப்பித்துளதாயின் எனக் கெடுத்தோதுவீர்களாக.

---

# வேளாளரது உழவின் விசேடம்.

---

தேவர்குறள் ௧0௪-ம் அதிகாரம்—உழவு.

ஆசி.—உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாந்
தொழுதுண்டு பின் செல்பவர்.

(இ-ள்) பரிமேலழகர் :—உழுது உண்டு வாழ்வாரே வாழ்வார்—யாவரும் உண்ணும் வகையான் உழுதலைச் செய்து அதனாற்றமுமுண்டு வாழ்கின்றாரே தமக்குரியாராய் வாழ்கின்றவர். மற்றெல்லாம் தொழுது உண்டு பின்செல்பவர்—மற்றையோரெல்லாம் பிறரைத்தொழுது அதனாற்றமுண்டு அவரைப் பின்செல்கின்றவர் எ-று.

தாமுமக்கட் பிறப்பினராயிருந்து பிறரைத் தொழுது அவர் சிலகொடுப்பத் தம்முயிரோம்பி அவர்பின் செல்வார் தமக்குரியரல்லரென்பது கருத்து.

சுழன்று மேர்ப்பின்ன துலக மதனா
லுழந்து முழவே தலை.

(இ-ள்.) சுழன்றும் ஏர்ப்பின்னது உலகம்—உழுதலான் வரும் மெய்வருத்த நோக்கிப் பிறதொழில்களைச் செய்து திரிந்தும், முடிவில் ஏருடையார்வழியதாயிற்று உலகம்; அதனால் உழந்தும் தலையுழவே—ஆதலான் எல்லா வருத்த முற்றும் தலையாய தொழில் உழவே எ-று.

உழுவா ருலகத்தார்க் காணி யஃதாற்றா
தெழுவாரையெல்லாம் பொறுத்து.

(இ-ள்.) அஃது ஆற்றாது எழுவாரை எல்லாம் பொறுத்து-அவ் வுழுதலைச் செய்யமாட்டாது பிற தொழில்கண்மேற் செல்வார் யாவரையும் தாங்குதலால். உழுவார் உலகத்தார்க்கு ஆணி—அதுவல்லார் உலகத்தாராகிய தேர்க்கு அச்சாணியாவர் எ-று. உழுவாரென்றது உழுவிப்பார் மேலுஞ் செல்லும்.

பலகுடை நீழலுந் தங்குடைக் கீழ்க் காண்ப
ரலகுடை நீழலவர்.

(இ-ள்) அலகு உடை நீழலவர்—உழுதற்றொழிலான் நெல் லினை யுடையராய தண்ணளியுடையோர், பலகுடை நீழலும் தங் குடைக்கீழ்க்காண்பர்—பலவேந்தர் குடை நிழலதாய மண் முழு தினையுந் தம்வேந்தர் குடைக்கீழே காண்பர் எ-று.

அலகு:—கதிர். தங்குடைக்கீழ் காண்பர்—தம்மரசனுக்குக் கொற்றம் பெருக்கி மண் முழுதும் அவனதாகக் கண்டிருப்பா ரென்பதாம். இரப்போர் சுற்றமும் புரப்போர் கொற்றமும் உழவிடை, விளைப்போர் என்றார் பிறரும்.

உழவினார் கைம்மடங்கி னில்லை விழைவதூஉம்
விட்டே மென்பார்க்கு நிலை.

(இ-ள்.) உழவினார் கைம்மடங்கின்:—உழுதலையுடையார் கை அதனைச் செய்யாது மடங்குமாயின், விழைவதூஉம் விட் டேம் என்பார்க்கு நிலை இல்லை—யாவரும் விழைவு முணவும் யாந்துறந்தோமென்பார்க்கு அவ்வறத்தின்க ணிற்றலு முளவாகா எ-று.

உழவர்க்கு உறுப்பாய கை வாளா விருப்பின் உலகத்து இம்மை மறுமை வீடென்னும் பயன்கள் நிகழாவென்பதாம்.

இன்னும், 1000 ஆண்டுகளுக்கு முன்னே சிவத்தியானம் சிவபூசை முதலியன வியற்றி நீண்டகாலம் தேகத்தோடிருந்து ஈற்றில் ஸ்ரீவிநாயகக்கடவுள் கிருபா விசேடத்தால் திருக்கைலாய நாதரைச் சேவித்திருந்த ஔவையாரும் தமது ஆத்திசூடியில்

னைத்தேடி னேனைத்தேடு
மேழிச்செல்வங் கோழைபடாது
தொழுதூண்சுவையி னுழுதூணினிது. என்றும்,

நல்வழியில்

ஆற்றங்கரையின் மரமு மரசறிய
வீற்றிருந்த வாழ்வும் விழுமன்றே—ஏற்றம்
உழுதுண்டு வாழ்வதற்கொப்பில்லைகண்டீர்
பழுதுண்டு வேறோர் பணிக்கு.

என்னுமிவ்வாக்கியங்களால் வேளாண்மாக்களின் பயிர்செய்தற்றொழில் மிக மேன்மையதென்றும், அதனால் அவர்க்குயர்வும் விளங்குகின்றது. இது மட்டோ பின்னும்.

குருபாத தாசர்செய்த குமரேச சதகத்தில்

நல்லதேவாலயம் பூசனைநடப்பதும்
நாடோறு மழைபொழிவதும்
நாடிய தபோதனர்கள் மாதவம் புரிவதும்
நல்வேத வேதியரெலாஞ்
சொல்லரிய யாகாதி தருமங்கள் செய்வதுந்
தொல்புவி செழிக்கு நலமுஞ்
சுபசோபனங்களுங் கொற்றவர்கள் செங்கோ
றுலங்கு மனுநெறி முறைமையும்
வெல்லரிய சுகிர்தமொடு வர்த்தகன் கொள்விலையும்
விற்பனையு மதிக புகழு
மிக்கவதி காரமும் தொழிலாளர் சீவனமும்
வீரரண சூரவலியும்
வல்லமைகள் சகலமும் வேளாளர் மேழியின்
வாழ்வினன் விளைவவன்றோ

என்னுமிச் செய்யுளானும், அம்பலவாணக் கவிராயர் பாடிய

அரப்பளீசுர சதகத்தில்

யசனாதி கருமமுந் தவறாமல் வேதிய
ரியற்றிநல்மேலர் பெறுவதும்

இராச்சியபாரஞ் செய்து முடிமன்னர் வெற்றிகொண்
டென்று நல்லோர் பெறுவதும்
வசனுதி தப்பாது தனதானியந்தேடி
வசியர் நல்லோர் பெறுவதும்
மற்றுமுளபேரெலா மிடியென்றிடாததிக
வளமை பெற்றோர் பெறுவதும்
திசைதோறுமுள்ளபல தேவாலயம் பூசை
செய்ய நல்லோர்பெறுவதுஞ்
சீர்கொண்ட பைங்குவளை மாலைபுனை வேளாளர்
செய்யுமேழிப் பெருமைகாண்.

என்னுமிச்செய்யுளானும், இன்னும் பற்பல நூல்களிற்கூறிப் போந்த வுதாரணங்களாலும் இவ்வேளாண்மரபினர் மிக்கதோர் பூர்வீக சுதந்திரச் சிறப்புடைச் செல்வர்களென்றே தெரிகுவா யாக. இதற்குச் சான்றாக,

தொழுங்குலத்திற் பிறந்தாலென் சுடர்முடிமன்னவராகி
யெழுங்குலத்திற் பிறந்தாலெனிவர்க்குப்பின் வணிகரெனுஞ்
செழுங்குலத்திற் பிறந்தாலென் சிறப்புடைய ராஜுலென்
உழுங்குலத்திற் பிறந்தாரே யுலகுய்யப்பிறந்தாரே. என்று கல்வியிற் பெரியகம்பரும் கூறுவாராயினர்.

மாண:—ஆம் அறிந்தனன்; ஐய! இப்பெருஞ் சீருஞ் சிறப்பும் அருமையும் பெருமையும் வாய்ந்துளார் பூர்வம் நிலவரமாய் வசித்த நாடு நகரங்களின் விவரங்களும் மற்றும் கோத்திர சங்கியைப்பற்றியும் தக்க பிரமாண பூர்வமாக எடுத்தோதப் பிரார்த்திக்கிறேன்.

---

# வேளாளரது நாடுநகர கோத்திர சங்கியை.

---

மிராசுரையிட்டு.

ஆசி:-சீர்கொண்ட தொண்டமண்டலமிருபதுடனுறு
செப்பிடுங் கோட்டமவையிற்
சேருமெழு பத்தொன்பதாகு நாடவையினூர்
தெசநூறு நவநூறதாம்

பார்கொண்ட கோத்திரம் பன்னிராயிரமுன்
பகர்ந்த பட்டயமுள்ளதிப்
பட்டயந்தனிலில்லை யுள்ளபடி முன்னோர்
பகர்ந்திடு மூர்களவையில்
வேர்கொண்ட காடுசில வாயதோதிரைவீசு
வேலை சிலதைக் கொண்டதோ
வேற்றரசர் நாட்டினிற் சேர்ந்திட்டவோவலது
மேடாய் வளர்ந்திட்டவோ
கார்கொண்ட நீர்கொண்டு பள்ளவழியாயவோ
கழறுமிவ்வூர் களெல்லாம்,
கச்சியிற் கல்வெட்டு செப்பேட்டி லுளவென்று
கற்ற நாவலர் சொன்னதே.

கோட்டமோ ரிருபானன்கு கூறுநா டெழுபத் தொன்பான்
றோட்டெழி லாயிரத்துத் தொளாயிர நத்தமாகுந்
தாட்டெழு கோத்திரங்கள் சகத்திரம் பன்னிரண்டாம்
நாட்டில் வேளாளர் தம்மை நவின்றிட வடங்காலக்கம்.

**சேக்கிழார் புராணம்.**

நாடெங்குஞ் சோழன் முனங்தெரிந்தே யேற்று
நற்குடி நாற்பத் தெண்ணாயிரத்துவந்த
கூடல்கிழான் புரிசைகிழான் குலவுசீர்வெண்
குளப்பாக்கிழான் வரிசைக் குளத்தூழான்முன்
தேடுபுகழாரிவருஞ் சிறந்துவாழச்
சேக்கிழார் குடியிலிந்தத் தேசமுய்யப்
பாடல்புரி யருண்மொழித் தேவரும் பினந்தப்
பாலறு வாயரும் வந்துதித்து வாழ்ந்தார்

மா :—இது நிற்க; நாட்டிற் சிறந்த நற்குடியாய வேளாண் மாக்கள் கார்காத்தவேளாளர், கானக்கிளிநாட்டுவேளாளர், ஊர் வளநாட்டுவேளாளர் *சோழநாட்டுவேளாளர், பாண்டிநாட்டு வேளாளர், தொண்டமண்டலவேளாளர், துளுவவேளாளர், நீறு பூசியவேளாளர், வீரசைவவேளாளர் முதலிய இன்னும் பல பிரிவினராய்க் காணப்படுகின்றார்களே! இவர்கள் இவ்வாறு பல

*சோழநாட்டுவேளாளர் - சோழியரெனப்படுவார்.

படப்பிரிந்ததற்குக் காரணந் தெரிந்திலன். ஆகையால் அருள் செய்யவும்.

---

# வேளாள பிரிவின் விவரணம்.

ஆசி :—மேலே காட்டிய செய்யுட் பிரகாரம் 24 கோட்டம், 79 நாடு, 1900 சிற்றூர்களினின்று 12000-ம் கோத்திரபூர்வமாய் வாழ்ந்து வந்தனரன்றோ? இங்ஙனம் வாழ்நாட்கழிக்குங் கால் சிற்சிலர் வசதிகாரணமாகவும், பற்பலர் பயிர்ச்செயல் சௌகரியார்த்தமாகவும், மற்றுஞ் சிலர் காலவேறுபாடு காரணமாகவும், இன்னுஞ் சிலர் அரசுரிமைக்கு அஞ்சியோடியும், பின்னும் பலர் தொழில் வேறுபாடு நோக்கியும் பலவேறு திசைகளை நோக்கிச் சென்று ஆங்காங்கே நிலைத்தமை கொண்டுமே அந்தந்த நாட்டின் காரணப்பெயராய் வழங்கத்தலைப்பட்டதாகத் தெரிகிறது. ஆகவே வாழையடி வாழையாய் வந்த பூர்வ யதார்த்த வைசியவேளாள மரபின ரிவரேயல்லது வேறல. ஆனால் மேலேகூறிய வேளாளர்களுள் நீறுபூசிய வேளாளரென்பார் பூர்வம் மதுராபுரியிலே ஸ்ரீ ஞானசம்பந்த சுவாமிகள் சமணரை வாதில்வென்று கழுவேற்றத் துணிந்தபோது அவர்களிற் பலர் பயந்து விபூதி ருத்திராக்ஷந் தரித்துக்கொண்டு சிவமதத்தவர்களாய் பலவேறு திசைகளிற் சென்று வாழ்கின்ற வக்காரணத்தால் அப்பெயர் வழங்கத்தலைப் பட்டதாம். மற்றும் வீரசைவவேளாளரென்பார், ஆதிகாலத்தில் ஸ்ரீ சுப்பிரமணியக்கடவுள் சூரனை சம்ஹரிக்கத் தமக்குப் பிற்படையாக்கொண்ட நவவீரர்களின் வழிவந்தவராகலின் அப்பெயர் வழங்குவதென ஓர் சாராரும், ஸ்ரீ அகோரவீரபத்திரர்க்கு அடிமை பூண்டு தொண்டுபுரிந்துவரும் மரபுநோக்கி அப்பெயர் வழங்குவதென சிலருங்கூறத் தெரிகிறது. பிறவுங்கூறுவாருளர்.

இப்போது மேற்கண்ட பிரிவினர் பலருள்ளும் சிலர் சைவாசாரத்தால் மேன்மையையும், சிலர் அசைவாசாரத்தால் தாழ்மையையும், சிலர் திரவியமிகுதியாலும், சிலர் நாகரீகத்தாலும் சிலர் கல்வித்திறமையாலும், சிலர் தேகப்பொலிவினாலும், மற்றுஞ் சிலர் உத்தியோக மதிப்பினாலும் வெவ்வேறு பிரிவினராய்

காணப்படினும் நன் காராயுமிடத்து ஈற்றில் ஒவ்வொருவரும் ஒவ்வோர் விசேடம்பற்றிக் கொள்ளல்கொடுத்தலினுற் கலந்துகொண்டே வருகின்றனர். ஓரறிவுயிரான மரத்திற்றேன்றிய பல வகைக் கொம்பு கிளைகள்யாவும் ஒன்றற்கொன்று சிறிது பெரிதாகவும், சில கொம்பின் கனி இனிப்பாகவும் சில கிளைகளின் கனி புளிப்பாகவும் அமைந்திருப்பினும் இனமாறுதலடையவில்லையன்றே? அதே போன்று மேற்கண்ட வைசிய வேளாண் மாக்கள் மேற்கூறிய பல்வகைக்காரணத்தான் பல பிரிவாகக் காணப்படினும் யாவர்க்கும் மரபு ஒன்றே யல்லது வேறன்றென்க.

---

# வேளாளரைச்சிலர் சூத்திரரென்பதின் விவரணம்.

---

மாண:—மாசிலாதருளும் தேசிகமணியோய்! தேவரீர் திருவாய்மலர்ந்தனவறிந்தேன். இப்போது நம் நாட்டில் வாழும் வேளாளர்களுட் பலரைச் சமயம்நேர்ந்துழி வினவுங்கால், அவர்கள் தங்களைச் சூத்திரரென்றே கூறுகின்றூர்கள். இவர்கள்தான் இவ்வாறு கூறுகின்றூர்களே யென்றுல், பிராமணர்களும் இவர்களைச்சூத்திரர் என்று ஒவ்வொரு சந்தர்ப்பங்களிலும் நிகிரிஷ்டம் செய்கின்றூர்கள். இதன் விவரமென்ன? அருள் செய்யப் பிரார்த்திக்கிறேன்.

ஆசி:— சீட, நீ எந்த வேளாளனைக் கேட்டனையோ அவன் தன்னைச் சூத்திரன் என்று கூறியதுண்மையே. எங்ஙனமெனில், அவன் உள்ளபடியே வேளாளனுயிருந்தும் தன்னை யின்னவன் என்று அறிந்துகொள்ளும் கல்வியறிவொழுக்கமில்லாத மந்தமதியினனென்பது சொல்லாமலே அமையும். அவ்வாறு கூறிய பாமரனது அழுக்குவாயினின்றும் வழுக்கி யொழுக்கிய இழுக்குரையை ஓர்பொருட்டாக வெண்ணற்க. ஏனெனில், ஷியார்களுட் பல்லோர் தாங்கள் வந்த வருணச்சிரமதருமமின்னவையென்று அறிந்துகொள்ளப் போதுமான கல்வியறிவு குறைந்தும், அஃதுள்ளாரைச் செறிந்து கேள்வியாலறியும் ஆற்

றனுமற்று ஒருமைப் பாடில்லாமை, தேற விசாரியாமை, அந்நிய பழக்கமுடைமை முதலியவைகளால் சிரத்தை குறைந்தும், நாத்திகமலிந்தும், சோம்பலிற்றிரிந்தும், வறுமையில் மெலிந்தும் ஒன்றுமறியா உலுத்தர்களாய் நடைப்பிணம்போன்றும், நாடகப்பதுமையெனவும் விளங்குவாராகலினென்க.

---

# வேளாளரைச் சில பிராமணர் சூத்திரரெனல்.

---

பிராமணர் கூறுவதென்னையோவெனின், கூறுதும்:-பிரம்ம க்ஷத்திரிய வைசிய சூத்திரரென்னும் சதுர்வர்ணத்தோடு நிற்கவில்லை. இப்போதைய கலியுகப்பெருமான் உற்சவ விசேடத்தால் நான்கு வருணமும் நன்னான்கு வருணங்களாயின. அஃதெங்ஙனமெனில், பிராமணர்களில் பிராமணர் பிராமணர்களில் க்ஷத்திரியர், பிராமணர்களில் வைசியர், பிராமணர்களில் சூத்திரர் என இவ்வாறாகவும் மற்ற மூன்று வருணத்தார்களிலும் கர்மாநுஷ்டானத்தாழ்வினால் காணப்படுகின்றார்கள். இவ்வாறு காணப்பட்ட பிராமணர்களில் தமது உயர்வருணத்துக்கேற்ப பிராமணிகம் அதாவது அந்த வருணாசிரம தருமமாகிய வேதம் ஓதல் ஓதுவித்தல், யாகம் செய்தல் செய்வித்தல், தானங்கொடுத்தல் வாங்குதல் முதலியனவும் மற்றும் நித்திய கருமானுஷ்டானம் காயத்திரி ஜெபம் என்னுமிவைகளைக் கனவிலும் கண்டுங் கேட்டும் செய்துமறியாதுள்ள பிராமணர்கள் எவ்வளவோ பெயரிருக்கின்றார்கள். இங்ஙனம் இவர்கள் தங்களொழுக்கயோக்கியதையே ஒரு சிறிதுமுணராத சாமானிய பிராமண சூத்திரர்கள் எங்ஙனம் பிறவருணத்தாரது சரித்திர உண்மையை உள்ளபடி யறிந்திருக்கப்போகிறார்கள், ஆகவே கல்வியறிவொழுக்கமில்லாத சில போலிப்பிராமணர்கள் கூறுவதைக் குப்பைக் கூற்றெனத் தள்ளுக.

மா:- கல்வியறி வொழுக்க மில்லாத காரணத்தாலே அவர்களைச் சூத்திரரெனக் கூறலாமோ ?

ஆ:—அழுக்கா றுடையான்க ணாக்கம்போன் றில்லை
யொழுக்க மிலான்க ணுயர்வு.

ஒழுக்க முடைமை குடிமை யிழுக்க
மிழிந்த பிறப்பாய் விடும்.

மறப்பினு *மோத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கங் குன்றக் கெடும்.

என்ற குறட் பாக்களானும், [னே.
நாற்பாற்குலத்தின் மேற்பாலொருவன் கற்றிலனாயிற் கீழிருப்பவ
கல்லாவொருவன் குலநலம்பேசுதல் நெல்லினுட்பிறந்தபதராகும்
மே. என்ற மதிவல்லோர் வாக்கானும் பெறப்படும்.

சான்றாக அந்தணசீல வொருவர்செய்த காக்ஷிப் பிரமாணம்.

## நம்மவர் நூற்றெட்டு.

பஞ்சாக்கரம் புகுந்த பார்ப்பாரின் வாயின்கண்
கஞ்சாக் குடியிருக்கக் காண்கின்றோம்—எஞ்சாத
போதையிலே மூழ்கிப் புலம்பிப் புலன்மயங்கிப்
பாதையிலே வீழ்வார் பரிந்து.

நாகையிலே யோர்நாள் நகரிற் புகுந்துயாம்
போகையிலே கண்ட புதுமைகேள்—நாகைப்
பறையர் சமைத்த பசுவை நாலைந்து
மறையோர் புசித்தார் மகிழ்ந்து.

புகைவண்டி யேறியாம் போகையிலே கண்ட
மிகவிந்தை கேட்கில் வியப்பீர்—அகமகிழ
பல்லிற் சுருட்டிடுக்கி பாய்பிரிங்லெயி னென்பமோ
சொல்லிற் சிறந்தோர்சேய் சொக்கி.

குடந்தையிலோர் பார்ப்பான் குடித்துக் குதித்துத்
தடந்தோளிற் றுப்பாக்கித் தாங்கியே—படர்ந்ததம்
பக்கம் பரப்பிப் பரிவாரத் தோடேகும்
§பக்கிசுடச் சென்றான் பரிந்து.

ஏ மாணவ! இவ்வாறாய சில அனுசாரப் போலிப் பிராம
ணர்களைச் சூத்திரரென்பது நிராடங்கமாகச் சொல்லாமலே அ
மையுமன்றோ? நிற்க; பின்னும், சாஸ்திர ஆராய்ச்சியும் சத்

*ஓத்து=நான்மறை §.பக்கி=பக்ஷி

சனபழக்கமு மில்லாத சில சாதாரண பிராமணர்களும் தங்கள் குடும்ப க்ஷேமார்த்தம் கருப்பன், வீரன் முதலிய துர்த்தேவதைகட்கு ஆடு பலியிட்டும், அல்லாசாமியை வேண்டிக் கையிற் கங்கணங் கட்டியும் பிரார்த்தனைசெய்தலை யாம் கண்ணாரக்கண்டுளோமாதலின் அன்னோர் மேற்குடிப் பிறந்தாரேனுங் கீழ்க்குடியாரே யாகுவர். ஆகவே இன்னோர் சூத்திரனெனசிறுமதியாற்கூறும்சிற்றுரையைப் பெருமதியாற் பிழையெனத்தள்ளக்கடவாய்.

சுலோகம்.

ராகோத்வேஷஸ்ச மோகஸ்ச பாருஷ்யஞ்ச னிருஸம்ஸதா
ஸாட்யஞ்ச தீர்க்க வைரத்வ மதிமாநமநாஜவம்
அம்ருதஞ்சா திவாதஸ்ச பைசூந்ய மதிலோபதா
விக்ருதிஸ்சாப்ய விக்ஞானஞ் ஜநநே ஸூத்ரமாவிஸது.

(இ-ள்.) இச்சை, வெறுப்பு, வேட்கைப்பெருக்கம், வன்சொல், இரக்கமின்மை, தெளிவிலாச்செய்கை, தீராப்பிடிவாதம் நல்லொழுக்கமின்மை, பொய்பேசுதல், வீண்வாதஞ் செய்தல், கோட்சொலல், பெருமூலோபம், அறியாமை முதலிய தீக்குணங்கள்யாவும் சூத்திரன் பிறந்தவாறே வந்தனவென்று அனுசானிகபருவத்துள் விதித்தவாறு காண்க. வேளாளர்க்கு யாண்டும் என்றும் இக்குணங்களிருந்ததாக நூல் வழக்கு முதலியனவின்றாம். என்றும் யாவருமிவரை "வாய்மை குன்றா வேளாண்விழுக்குடி" என்பது முதலியவாகப் புகழ்ந்தமை பன்னூலானுங் காணப்படுகின்றது. அதுகொண்டே ஸ்ரீ பரஞ்சோதிமாமுனிவர் தமது அருமைத்திருவிளையாடற்புராணத்து நகரப்படலத்துள்,—

வருவிருந்தெதிர்கொண்டேற்று நயனுரைவழங்குமோசை
யருகிருந்தடிசிலூட்டி முகமனன் கறையுமோசை
யுரைபெறுதமிழ்பாராட்டு மோசைகேட்டுவகைதுள்ள
விருநிதியளிக்குமோசை யெழுகடலடைக்குமோசை

அருந்தினரருந்திச்செல்ல வருந்துகின்றருமாங்கே
யிருந்தினிதருந்தாநிற்க வின்னமுதட்டுப்பின்னும்
விருந்தினர்வரவுநோக்கி வித்தெலாம்வயலில் வீசி
வருந்திவிண்ணோக்குமோரேருழவர்போல் வாடிநிற்பார்.

வானமுந்திசையும்பொங்கும் புகழ்மையும்வானைப்பேணு
ஞானமும் பொறையுங்குன்றா நன்றியுமூக்கப்பாடுந்
தானமுங்கொடையுமன்பும் வரிசையுந்தகைசானண்பு
மானமுந்தவஞ்செய்தீன்ற மகவுபோல் வளர்க்கவல்லார்,

என்று திருவாய்மலர்ந்தருளிய திருப்பாக்களானும் விளக்கியரு ளினமையுங்காண்க. இன்னும் ஸ்ரீஞானசம்பந்தசுவாமிகள் தமது திருமுறையுள் "வேளாளரென்பவர்கள் வள்ளன்மையான் மிக்கிரு க்குந்தாளாளர்" என்று கூறினமையுமஃதே. நிற்க; இவ்வேளாள மரபினரில் பெரும்பாலரான தேவாரச்செல்வராம் அப்பர்சுவாமி கள், பட்டினத்தார், தாயுமானவர், சிவப்பிரகாசசுவாமிகள், திரு விளையாடற் புராணஞ் செய்தருளிய பரஞ்சோதி மாமுனிவர், பெரியபுராணஞ் செய்தருளிய சேக்கிழார், சிவஞானபோதஞ் செய்தருளிய மறைஞானதேசிகர், திருவருட்பிரகாசவள்ளலா ரென்னும் இராமலிங்கசுவாமிகள், இலக்கணக்கொத்துநாலுடை யாராய திருநெல்வேலி சுவாமிநாத தேசிகர், கடைச்சங்கத்திரு ந்த பொய்யடிமையில்லாப்புலவர்களுள் களத்தூர்க்கிழார், கோவூ ர்க்கிழார், செங்குன்றூர்க்கிழார், அரிசிற்கிழார் முதலானவர்களும், மற்றும் முருகக்கடவுள் வரப்பிரசாதியாம்குமரகுருபரசுவாமிகள் தருமபுராதீனக்கர்த்தரும் சிவபோகசாரஞ் செய்தருளியவருமா ன ஸ்ரீஞானசம்பந்தசுவாமிகள், திருவாவடுதுறை சிவஞானசுவா மிகள் முதலிய மடாதிபதிகளும், சைவ சமயமே சற்சமயமென ச்சார்ந்து ஸ்ரீசிவபெருமானையும் சிவனடியார்களையுந் தரிசித்து வணங்கி முத்திப்பேற்றிற்கு வித்தாய் விளைந்த உத்தமர்களாம் நாயன்மார்களுள், இளையான்குடிமாறநாயனர், விறன்மிண்டநாய னர், மானக்கஞ்சாற நாயனர், அறிவாட்டாயநாயனர், ஏயர்கோ ன் கலிக்காமநாயனர், மூர்க்கநாயனர், சாக்கியநாயனர், சத்திநாய னர், வாயிலார் நாயனர், முனையடுவார் நாயனர், செறுத்துணைநா யனர் கோட்புலி நாயனர், குண்டையூர்க்கிழார் முதலியவர்களும் இன்னுங் கல்வியறிவொழுக்கங்களிற்சிறந்த வித்வ சிகாமணிக ளாய் பாரதம் பாடிய நல்லாப்பிள்ளை, திருநெல்வேலி மயிலேறும் பெருமாள் பிள்ளை, இலக்கண விளக்க மியற்றிய வைத்தியநாத நாவலர், சைவசித்தாந்த சாஸ்திரங்கள் பலவற்றையும் நன்காரா ய்ந்துணர்ந்தும், தம்முள்ளிட்ட சிஷ்யரெண்ணிறந்தார்க்குப்போ

தனுசிரியருமாய்த் தங்காலமுற்றும் பிரமசரியவாசிரமத்தொழுகி சைவசமய சாத்திரப் பயிர் சாலத் தழைத்தோங்கச் செய்தும், ஸ்ரீசிவபெருமானை மறவாத சிந்தையினருமான ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலரவர்கள், மகா வித்வான் மீனுக்ஷிசுந்தரப்பிள்ளை, சபாபதி நாவலர், வித்வான் கதிரைவேற்பிள்ளை, தொழுவூர் வேலாயுத முதலியார், திருமயிலை சண்முகம் பிள்ளை, சரவணப்பெருமாளை யர், விசாகப்பெருமாளையர் சோழவந்தான் மகாவித்வான் ஸ்ரீசண் முகம்பிள்ளை முதலாயினேருட இன்னும் இவருள்ளிட்டாரெ ண்ணிறந்தோரும் இவ்வேளாண்மரபிலே பிறந்து, வித்தையா லும், புத்தியாலும் சிவபத்தியாலும் அருட்சித்தியாலும் பெறு முத்தியாலும் விசேடித்து சத்துவகுண வுத்தமசீலர்களாய், அ ன்றறிவாமென்னுதறஞ் செய்தலே தமக்கின்றியமையாத்துணை யெனக்கொண்டும், வாளுளை வீணுளாக்காது மேனுளாகக்கழித் தும், உயிர்கட்கிரங்கியும், உண்மைபேசியும், சமயாசார தீக்ஷை களாற்றம்மைச் சுத்திகரித்துப், சரியை கிரியாயோகஞானமார்க் கத்தைப் பற்றிச் சாதனசதுஷ்டயங்களைச் சாதித்தும், எக்கா லத்தும் எவர்களாலும்புகழப்பதம்பெற்றுமுள்ள இவ்வேளாளச் செல்வர்களைப்பற்றி ஆழ்ந்தறியாது பாழ்த்த பேழ்வாய் பிளந்து சூத்திரரென்று திண்ணை தூங்கித் தென்னுல்ராம னெவனே பிதற்றினமை கேட்டு நம்முன் கூறவந்தீர்; போதும் போதும் நிறுத்தும்.

மாண:— அறிந்தனன், பிழை பொறுத்தாள்க; மேலே கூறி ப்போந்த தசாங்கமுதலிய பெருமைவாய்ந்த வைசியவேளாளரு க்குக் கேவலம் சேற்றில் ஏர்கொண்டு உழுதல் முதலிய கஷ்டத் துக்கேதுவாகிய தொழிலை விதித்தது எப்பெற்றி கொண்டோ? எளிபேறகருளுக.

---

# வேளாளர் நேரே ஏர்கொண்டுழுதல் செய்திலரென்பது.

---

ஆசி:—வேளாண்மாக்கள் பயிர்ச்செயல் விஷயமாகத்தாங்க ளே நேரில் ஏருழுதல் பெரும்பான்மை யெங்குமில்லை. தங்கட்

குக் கீழ் வகுப்பினராகிய சில வறியர்களேயும், மற்றும் பள்ளர் பறையர்களைக்கொண்டுமே அந்நாள்தொடுத்து இந்நாள்வரையில் பண்ணையாளாகவைத்துக்கொண்டு உழுது பயிர்செய்கின்றார்களே தவிர மற்றன்று; ஆனால் சில சாமானிய வறிய குடித்தனக்காரர்கள் பண்ணையாளுக்குக் கூலிகொடுக்க வியலாது உழுதலை ஈண்டு காட்டுதல் பொருந்தா தென்க.

மாண :—இது நிற்க; வேளாளர் என்னும் பதத்தை, வேள் ஆள்பவர் எனப்பிரித்து, வேள்-மண்ணை ஆள்பவர் ஆளக்கூடியக்ஷத்திரியர் என ஏன் பொருள் படுத்தக்கூடா? தயவுகூர்ந்தருள்க.

---

# வேளாளநாம திரிபார்த்தம் பொருந்தாதென்பது.

---

ஆசி :—அங்ஙனம் பொருள்கோடல் அமையாது. என்னெனில், க்ஷத்திரியர் மண்ணுள்வது பிரசித்தமாதலால் அது சிறப்பன்று. மண்ணிலுள்ள மனிதர்களை ஆளுந்தன்மையினரென்று பொருள்படுமே யொழிய வேளாண்மை யென்னும் உதவிசெய்தற்காரணமாகக் கிடைத்த வேளாளநாமத்துக்கு மேற்கண்டவாறு செய்த உரை தவறுமென்க. இன்னும் வேளாளர், அந்தணர்க்குத் தானமும் அரசர்க்கு வரியும், சூத்திரர்கட்குக் கூலியும், சங்கரர்களுக்குப்பிச்சையுங்கொடாவிடத்து உலகு நிலைபெறாதாகலானும் கொடைக்கே உரிமைக்கடன்பற்றி வந்தவராகலானும் இவர்களை விட்டு க்ஷத்திரியரெனக்கொள்ளல் சிறிதும் பொருந்தாதென்க.

மாண :—அறிந்தனன்; வேளாளருக்கு வைசியர் என்று ஸ்மிருதி சம்மதம் ஏற்பட்டதற்குப் பொருளுரைக்குமாறு பிரார்த்திக்கின்றேன்.

---

# வைசியநாம சப்தார்த்தம்.

---

ஆசி :—வைசியர் என்னுஞ் சொல் ஸ்மிருதிக்கண்டோன்றிய வடமொழிப்பெயர். இது சாதாரணமாக "வைஸ்" என்

னுந் தாதுப்பொருளை அடுத்தாராகலின் வர்த்தகர், பயிரிடுவோர் எனப் பொருள் படுகின்றமையால் வேளாளருக்கு வடமொழிப் பெயராய் வைஸ்யரென வந்தவாறென்க,

மாண :—அறிந்தனன். இதுநிற்க, ஸ்மிருதி சம்பந்தமாகவும் மற்றும் இதிகாச சாக்ஷியாகவும் நான்கேஜாதிகளெனச்சாதித்து வருகிறீர்கள்; உலகத்திலோ இப்போது காணப்படுகின்ற ஜாதிப்பிரிவினை அநந்தமாயிருக்கின்றன. இவ்வாறு பலபடவிரிந்ததற்குப்போதுமான காரணமும், ஜாதி நான்கே யென்பதற்குப் போதிய உதாரணமும் உளதாயின் தயவுகூர்ந்தருளுக.

ஆசி :—ஸ்மிருதி சம்மதத்தால் ஆதியில் படைப்புப் பொருளெல்லாம் நால்வகைத்தென்றே நன்கு புலப்படுகின்றது. எவ்வாறெனின்;

## தேவர்களிற் சதுர்வருணம்

| | |
|---|---|
| பரமசிவன் | பிராமண சாதி |
| விஷ்ணு | க்ஷத்திரிய சாதி |
| பிரம்மா | வைசிய சாதி |
| இந்திரன் | சூத்திர சாதி |

## ஸூத்திரம்.

பிராமணோ பகவான்ருத்ரோ க்ஷத்திரியோ பரமோஹரி:
வைஸ்யப் பிதாமகஞ்சைவ இந்திரஸூத்ர அஜாயதே-

## நவக்கிரகங்களிற் சதுர்வருணம்.

| | |
|---|---|
| சுக்கிரன், குரு | பிராமணசாதி |
| சூரியன், செவ்வாய் | க்ஷத்திரியசாதி |
| புதன், சந்திரன் | வைசியசாதி |
| சனி, | சூத்திரசாதி |

## சிநேந்திரமாலை (பாடபேதம்)

ஆதித்தன் செவ்வா யரசக்கோ ளாகுமால்
வாதித்த புந்தி மதிவணிகன்—ஓதும்
மறைக்குலக்கோள் மன்னவனுஞ் சுக்கிரனு மற்றைக்
குறைக்குலக்கோள் காரியெனக் கூறு.

## இராசிகளிற் சதுர்வருணம்

| | |
|---|---|
| கர்க்கடகம், விருச்சிகம், மீனம் | பிராமணசாதி |
| சிங்கம், தனுசு, மேஷம் | க்ஷத்திரிய சாதி |
| துலாம், கும்பம், மிதுனம் | வைசிய சாதி |
| கன்னி, இடபம், மகரம் | சூத்திரசாதி |

(பாடபேதம்)

வேந்தனரி யாடுசிலை வேதியன்றேள் நண்டுமீன்
வாய்ந்ததுலை யாழ்கலசம் வணிகனே—மாந்தரீர்
கன்னிசுறு காளைக் கடைநான்கி லென்பரே
யுன்னுகலை வல்லபெரி யோர்

## மிருகங்களிற் சதுர்வருணம்

| | |
|---|---|
| ஆனை, குதிரை | பிராமணசாதி |
| சிங்கம் | க்ஷத்திரிய சாதி |
| பசு | வைசிய சாதி |
| எருமை | சூத்திர சாதி |

மூலம் இதுவுமது

பரிகரியும் வேதியனும் பார்ம னரியாய்
பெரிய பசுவணிகன் பேதாய்—உரியதொரு
மேதியது சூத்திரனு மேதினியி லெப்போதும்
ஓதியுணர்ந் தோருரைத்தா ருற்று.

## பக்ஷிகளிற் சதுர்வருணம்

| | |
|---|---|
| அன்னம், காகம் | பிராமணசாதி. |
| சரபம், இராஜாளி | க்ஷத்திரியசாதி. |
| மயில் | வைசியசாதி. |
| ஆந்தை | சூத்திரசாதி. |

இதற்கு மூலம்

அன்னங்கொடிமறையோன் அஞ்சரபம்ராஜாளி
மன்னர் மயில் வணிகன் மாநிலத்தில்—சொன்ன
சூத்திரன்றானாந்தை சோர்வில் பக்ஷிசாதிவகை
மாத்திரமாக்கொள்வீர் மதித்து.

## விருக்ஷங்களிற் சதுர்வருணம்.

| | |
|---|---|
| மா, வில்வம் | பிராமணசாதி. |
| அரசு, பூவரசு | க்ஷத்திரியசாதி. |
| பலா | வைசியசாதி. |
| எட்டி | சூத்திரசாதி |

இதற்கு மூலம்.

மாவில்வ மாமறையோன் மன்பூவரசரசாம்
பூவசியன் ருன்பலவாப் போற்றுமே—நாவிசைந்து
எட்டியது சூத்திரனு மென்றுமதி வல்லோர்முன்
ஒட்டியது தானுரைத்தா ரோர்ந்து.

## இரத்தினங்களிற் சதுர்வருணம்.

| | |
|---|---|
| வயிரம், முத்து | பிராமணசாதி |
| மாணிக்கம் பவளம் | க்ஷத்திரியசாதி |
| புஷ்பராகம், வைடூரியம், கோமேதகம் | வைசியசாதி |
| நீலம், மரகதம் | சூத்திரசாதி |

**திருவிளையாடல் மாணிக்கம்விற்ற படலம்.**

முன்னவரென்பகற்ருேர் வச்சிரமுங்கீர்முத்த
மன்னவரென்பதுப்பு மாணிக்கம் வணிகரென்ப
மின்னவிர் புருடராகம் வயிடூயம் வெயிற்கோமேதம்
பின்னவரென்ப நீலமரகதம் பெற்றசாதி.

என்றிவ்வாருக பெரும்பாலும் நான்குவகையானே விளங்கப்படலால் மனுஷியஜாதியும் நான்கேயல்லது வேறில்லை. ஆனால் இக்காலத்தில் மேலேகூறிய நான்குஜாதியரும் 16-ஜாதிகளாகியும், இன்னும் சங்கரஜாதிகள் பற்பலவாக நவீன கற்பனுபோலிக் குருமூர்த்திகளால் தோன்றியும், மற்றும் அன்னியதேயத்தினின்று மிலேச்சஜாதியரும் இத்தேயத்தில் குடியேறி நாகரீகத்

தால் மாறி வேறுசாதியராகியுங் காணப்படுகின்றார்கள். ஆயி னும் இன்னோர் வேதாதிகாரத்தால் பேசப்படாதா ராகலின் ஈண்டெடுத்துப்பேசுவ தனாவசியமெனத் தள்ளப்பட்டது. விரிக் கிற் பெருகுமெனவறிக.

மாண—அறிந்தனன்; இதுநிற்க; சிலபுராணங்களிலும் வே ளாளரைச்சூத்திரரென்றே பேசிவருகின்றதே; இதன் விவர மென்ன அருள்செய்க.

# வேளாளரைச் சூத்திரரென்ற புராண விவரணம்.

ஆசி—சில நூற்றாண்டுகளுக்கு முன்னே இத்தேசத்தில் ஆகமவிரோதிகளாகிய மாயாவாதிகள் பிரவேசித்து ஆகமங்களை மறுத்துச்சில குறும்பரசர்களுக்குக் குலச்சிறப்பு முதலிய விசே டங் கற்பித்துச் சுவாதீனஞ் செய்துகொண்டு பொறாமையால் ஆகமவாதிகளாகிய ஆதிசைவ வேதியர்களைப் பூசாரியெனவும், அவர்கட்குச் சார்பாயிருந்த வேளாளர்களைச் சூத்திரரெனவும் வழங்குவிக்க, அதன் வயப்பட்டு முற்காலத்துள்ள அறிஞர்கள் குறும்பரசர் அதிகாரத்திறகஞ்சி வாளாவிருக்க, பிற்காலத்துள் ளாரும் உண்மையுணராது மயங்கி,

நூலுரை போத காசிரியர் மூவரும்
முக்குணவசத்தான் முறைமறந்தறைவரே.
இம்முறையெல்லா மெவர்பகுத்தறியினும்
அவத்தைவயத்தால் அலைகுவர் திடனே.
அதிமதிநுட்பமோடதிநூல் கற்பினும்
விதியதுவசத்தால் விதிவிலக் கயர்ப்பார்.

என்றிலக்கணக்கொத்துட் கூறியபடி அவத்தைக்குள்ளாய் அப்புராணங்களுட் கூறினர். இஃதன்றியும், அம்மாயாவாதிகள் ஆதிசைவ வேதியரையும் வேளாளரையும் சூத்திரர்களென்பு

தோடு விட்டபாடின்றி ஞானிகள் சிலராற் செய்யப்பட்டுள்ள நூல்களிலும் அவ்வண்ணமே தங்கள் கருத்தைப்போல் மனம் போனபடி பலவிஷயங்களையுந் திருத்துவித்து மிருக்கின்றார்கள். இதுமட்டோ! எவ்வகைப்பட்ட வேள்விகளிலும் அக்ரதாம்பூலச் சிறப்புடையவர்களும், சுக்லயஜுஸ் சாகையர்களுமாகிய பிரதம சாகைப் பிராமணர்களைப் பொறாமையானே சூரியனால் மத்யான சண்டாளத்துவசாபம் பெற்றவரெனப் பொய்க்கதை கட்டிப் புலம்பா நின்றனர்.

இங்ஙனம் இம்மாயாவாதிகள் ஒருவர்மட்டோ! இவரல்லாப்பலசமயவாதிகளும் பாரதம், இராமாயணம், பதினெண்புராணங்கள், ஸ்மிருதிகள், அங்கநூல்கள், உபநிடதங்கள், சுருதிமொழிகள் முதலிய எல்லாவற்றையும் வேண்டியவாறு மிகுத்தும், குறைத்தும், மாறுபடுத்தியும் விட்டார்கள். பண்டைக் காலத்துதான் இவ்வாறு செய்தார்களேயென்றால், இக்காலத்தும் மேற்கண்டவாறே மதத்துவேஷகாரணமும் அறியாமையும் பொறாமையுங் கொண்டு பிரசங்கம், பத்திரிகை, புத்தக முதலியனவாயிலாக மாறுபடத் திருத்தி வருகின்றார்கள். இம் மாறுபாடு எல்லாப்பாஷைகளிலுமுள்ளன. என் செய்வாம்! வினைத் திறமும் காலவித்தியாசமும் நேர்ந்தவாறென்க. ஆகலான் நீவிர் நன்கு பரிசீலனையாலும் தொன்னூற் பயிர்ச்சியாலும் நாளடைவில் தெளிவீராக.

மாண:—ஆம் அவ்வாறே அறிவேன். இம் மாயாவாதியர் இங்ஙனம் மாறுபடச்செய்த தெற்றுக்கோ வறிவிக்கவும்.

## மாயாவாதியரின் கொள்கை.

ஆசி:—இம் மாயாவாதியர்க்கு முக்கியமாக பாவம் என்பதொன்றில்லையென்னும் தங்கள் சித்தாந்தத்துணிபேயன்றி வேறல்ல. என்னெனில், அவர்களது மாயாவாத நியாயப்படி சீவன் என்பதொன்றில்லை; எல்லாம் பிரமமே யென்றும், எல்லா நற்செயல் தீச்செயல்களும் பிரமமே காரியப்பட்டு புரிதலால் பாவ

புண்ணியங்களின் பயன் சீவர்களுக் கில்லையென்ற கொடுந்துணி பேயாம். விரிக்கிற் பெருகும்.

மாண:—கூறியதுணர்ந்தேன். தேவரீர் கூறியயாவும் உண் மையெனத்தெரிந்தேன். அவ்வாறு தோன்றினும் இடையிடை யே சிலசந்தேகங்களும் உடனிகழ்ச்சியா யென் மனதில் ஏற்படு கின்றன. அதாவது வேளாண்மாக்கள் வைசியரென்பதற்கு எவ்வ ளவோ பிரமாணங்கள் அடுக்கடுக்காயெடுத்துக் காட்டுகிறீர்கள். அவையனைத்தும் சரியே; ஆயினும் நம் வேளாள மரபினர் வை சியரேயானால் பூணுநூல், வேத பாராயண முதலியன ஸ்மிரு திக்கண் இவர்கட்குக் கூறியிருந்தும் இன்னோர் அதனைச் சிறி தும் அனுசரியாது விட்டதைக்கொண்டு ஏன் இவர்களைச் சூத் திரரென்று கூறவொண்ணாது? தயவுசெய்தருள்க.

---

# வேளாளர், பூணுநூல் தரித்தல் உரித்தாமெனல்.

---

ஆசி—சீட, நன்றுகூறினை! நம் வேளாண்மாக்களுக்குக் கா லவேறுபாட்டாலும், தொழில் வேறுபாட்டாலும், சாஸ்திர பயிர்ச்சிக்குறைவாலும் வருணாச்சிரமவொழுக்கத்தினை நன்கெ டுத்தோதும் மநுஸ்மிருதி, பராசரஸ்மிருதி, யாஞ்ஞவல்கியஸ்மி ருதி முதலிய ஸ்மிருதிகளில் மிகவிரிவாய்க் கூறப்பட்டுள்ளதை பகுத்தறியும் சார்பில்லாமை, ஒருமைப்பாடில்லாமை, தெளிவாய் விசாரியாமை, அந்நியபழக்கமுடைமை முதலிய பல காரணங்க ளால் கல்வி ஊக்கங்குறைந்து இந்த விசாரிப்பினால் பயன் யா தெனச் சிரத்தையின்றி நாத்திகம் பேசக்கற்று சோம்பலதிகரி த்து வறுமைக்கிடனாய் வரவர அம்முன்னோரொழுக்கங்குறை ந்துவருகின்றது. ஆயினும் தற்காலத்தில் பெரும்பாலார் சுபாசு பகருமகாலத்துந் தவறாது பூணுநூல் தரித்தே வருகின்றார்கள்.

மாண—இது நிற்க; வேள்வி, வேதபாராயணமென்னு மிவை யும் ஏன் செய்யாதொழிந்தனர்?

# வேளாளர் வேதாதிகாரிகளெனல்.

ஆசி—கூறுதும்: வைசியராம் இவ்வேளாண்குடிமக்கள் மநு தருமர் விதித்தவாறு விவாகம், உபநயன முதலிய சோடசகருமங்கள், சமயதீக்ஷை, விசேஷதீக்ஷை, நிருவாணதீக்ஷை, ஆகுசாதிவிதிகள், சௌசாசமனம், ஆடை, உபவீத முதலிய பிறவும் பராசரஸ்மிருதிக்கண் விதித்தவாறு பெரும்பாலார் அநுஷ்டித்தேவருகின்றார்கள். சிறுபான்மையோர் தங்கடங்கள் இலௌகிகவிர்த்தியாலும், மிதவிசாரிப்பாலும், வறுமையாலும், ஷை கருமங்களை கைவிட்டனர். சிற்க; வேதம், ஆகமம், உபநிடதம், புராணம் என்னுமின்னான்கையும்பற்றி விசாரிக்கப்புகின் ஈஸ்வரவாக்கியமென்றே அதனதன்றலையிலே குறிப்பித்திருக்கின்றன. ஆகவே ஒருபடித்தான ஆன்மாக்களைப் பிழைப்பிக்க வேண்டிக் கருணையினாலே திருவுளங்கொண்ட கடவுள், அவ்வான்மாக்களுக்குட் பக்குவநோக்கிப் பாசஞானம், பசுஞானம், பதிஞானம், அநுபவ ஞானம் என்னும் நான்குவித உணர்ச்சிகளையும் விளக்குவிக்கும்பொருட்டு அங்ஙனம் பிரித்துள்ளதைப் பக்குவான்மாக்கள் தங்கடங்கள் மந்ததரதீவிரதர பக்குவத்தினராக ஒவ்வோர்சார்பார் ஒவ்வொன்றை யப்பியசிப்பதைப் போலவே வேதத்தையும் தீவிரதரப்பக்குவிகள் சிற்சிலர் ஓதியுணர்ந்திருக்கின்றார்கள் என்க

மாண—இப்போது தேவரீர் கூறியவாற்றான் வேளாண்மாக்களில் வேதத்தை ஓதியுணர்ந்தார் இன்னார் என்பதை அறிவிக்கப் பிரார்த்திக்கின்றேன்.

# வேளாண்மரபினரில் வேதபாராயணஞ் செய்தார் இன்னாரெனல்.

ஆசி—"ஆதலர்க்குச்செம்பொ னளிக்குங்கை யாகமங்கள் வேதபுராணங்கள் விரிக்குங்கை" என்ற மெய்ம்மொழிப்பிரகா

ரம் பூர்வம் சிவஞானபோதஞ் செய்தருளிய * மெய்கண்டதேசிகர் வேளாளரே. அவர் தமது நூலில்

அக்கரங்களின்றும் அகரவுயிரின்றே
லிக்கரமத்தென்னு மிருக்கு.

எனப் பிரமாணித்தவிடத்து, அவர் வேதமுணர்ந்தவரென்றே தெள்ளிதிற்றுணியப்படும். இது நிற்க; சிலகாலத்துக்கு முன்னே திருவாவடுதுறை ஆதீனத்தில் எழுந்தருளியிருந்த ஸ்ரீ சிவஞானசுவாமிகள் வேதாந்தபாஷியம் வாசிக்க அபேக்ஷித்தகாலத்தில், ஓர் ஸ்மார்த்தப்பிராமணர் சூத்திரரென்று சொல்லிவைப்பதற்குத் தடுத்துப் பின் கடவுள் சந்நிதியிலிட்ட திருவுளச்சீட்டு விதித்ததால் சொல்லப்படுமென்று கூறி அவ்வாறு அப்பாஷியத்தைக்கூற உணர்ந்தனர்.

இன்னும் சுத்தசைவ வேளாளர்கள் வேதமாதாவாகிய பிரமகாயத்திரி, சிவகாயத்திரியை ஜெபித்தும் வருகின்றார்கள். சிலர் இரகசியமாக வேதத்தை பாஷியத்தோடும் ஆராய்ந்தறிந்து வருகின்றார்கள். ஆயின், வேளாளரனைவரும் ஓதவில்லையேயெனில், அது அடாது; பிராமணர்களில் சிலசார்பார்மட்டும் எவ்வாறு ஓதிவருகின்றார்களோ அதுபோன்று வைசியவேளாளர்களிலும் பக்குவப்பட்ட சிலரே ஆராய்ந்து வருகின்றார்கள்.

வேதமென்பது ஒன்றேயாயும், பொருட் பாகுபாட்டால் நான்மறை யானாற்போலவே மொழிப்பாகுபாட்டாலும் வடமொழிமறை, தென்மொழிமறை யெனவும் இருவகைப்பட்டுள்ளன. சில்வாழ்நாட் பல்பிணிச் சிற்றறிவினையுடைய மாந்தர்க்குப் பயன்படுமாறே வியாசர் இருக்கு, யஜுசு, சாமம், அதர்வணம் என நால்வகைப்படுத்தினார்போன்று திருவருட்செல்வராய நால்வர்களாலும் ஆழ்வார்களாலும் அருளிச்செய்யப்பட்டதுமான திராவிடவேதத்தை வைசிய வேளாளர்கள் பக்தி சிரத்தையோடும் பாராயணஞ் செய்துவருகின்றார்கள். இதுநிற்க; தெய்வப்புலமைத் திருவள்ளுவனாராற் செய்தருளப்பட்ட திருக்குறளும் தமிழ்வேதமென்றே சாற்றுவாம். எங்ஙனமெனில், திருவள்ளுவரது பூர்வஜன்மம் பிரமதேவர். அப்பிரமதேவர் வாயிலாக

* மெய்கண்ட தேசிகரை மறைஞானதேசிகரென்று கூறுனரும் உளர்.

வே நான்மறை பிறங்கினவென்பது யாவர்க்கும் நன்குவிளங்கும் அங்ஙனமாகக் கடவுளரது பிரேரேபணையானே வடக்கின்கண்ணேயுள்ள வடமொழிப் பயிர்ச்சியோர்க்குப் பயன்றருவனவாயிருக்கின்றதேயன்றித் தெற்கின்கண்ணே யுள்ள திராவிடபாஷையோர்க்குப் பயன்படுமா றின்றேயென அன்னூன்முகனுரை இத் தமிழ்நாட்டின்கண் திருவள்ளுவரா யவதரிக்கச்செய்து அவர்வாயிலாக அந் நான்மறைப் பொருளினையே முப்பாலாகப் பிரித்துக் குறளென்னுந் தமிழ்மறையைத் திருவாய்மலர்ந்தருள விரும்பப் பட்டதென்றுந் தெற்றெனப் புலப்படுகின்றது. இதற்குப் பிரமாணம் வருமாறு காண்க.

## நாமகள் அசரீரி வெண்பா

நாடா முதனூன் மறைநான் முகனாவிற்
பாடா விடைப்பா ரதம்பகர்ந்தேன்—கூடாரை
யெள்ளிய வென்றி யிலங்கிலைவேன் மாறபின்
வள்ளுவன் வாயதென் வாக்கு.

(இ-ள்) பரிமேலழகர் உரை: கூடாரை எள்ளியவென்றி இலங்கு இலைவேல்மாற—பகைவரைப் புறங்கொடுக்கச்செய்து இகழ்ந்த வெற்றியை யுண்டாக்கி விளங்காநின்ற இலைபோலும் வேற்படையையுடைய பாண்டியராசனே, நாடா—உலகத்தார் விதிவிலக்குகளை அறிந்து உய்யும்வழியை நாடி, முதல் நான் முகன் நாவில் நான்மறைபாடா—படைப்புக்காலத்திலே பிரமனது நாவிலிருந்து இருக்கு முதலாகிய நான்குவேதங்களையும் பாடி, இடைப் பாரதம்பகர்ந்தேன்—நடுவானகாலத்திலே பாரதமாகிய வேதத்தைக்கூறினேன்; பின் என் வாக்கு வள்ளுவன்வாயது, அதற்குப்பிற்பட்ட இக்காலத்திலே என்வாக்குத்திருக்குறளாகிய வேதத்தைச்சொல்லி வள்ளுவன்வாயின் கண்ணதாயிற்று.

தன் கணவனாகலின் நான் முகனாவிலிருந்தேன்றும், அவனவதாரமாகலின், வள்ளுவன் வாயதென் வாக்கென்றும் கூறினாள். பாரதம் வியாசனைக்கொண்டு சொல்லப்பட்டது. இதனால் நான்மறை பூர்வவேதமும், பாரதம் மத்தியவேதமும், திருக்

குறள் உத்தரவேதமும் என்றதாயிற்று. வேதம் மூவகைத்தென் பதூஉம், இவற்றது தோற்றமுறையால் இஃது வாக்கியப்பிரமா ணத்திற் சிறப்புடைத்தென்பதூஉம் சொல்லியபடி.

மா—அறிந்தனன்; தேவரீர் மேலே கூறியவாற்றான் திருக் குறளும்பாரதமும் நான்மறைப்பொருளாய் விளங்கினவேயன்றி திருவருட்செல்வராம் நால்வர்களால் அருளிச் செய்யப்பட்ட தேவார திருவாசகாதிகள் அம்மறைப்பொருளாய்க் கூறப்பட வில்லையே! அதற்கேதும் ஆன்றோர் வாக்குளதாயின் தயை செய்க.

---

# தேவாரதிருவாசகாதிகள், திருக்குறள் நான்மறைச் சாரப்பொருளெனல்.

---

ஆசி- தேவர் குறளுந் திருநான் மறைமுடிவு
மூவர் தமிழு முனிமொழியுங்—கோவை
திருவாசகமுந் திருமூலர் சொல்லும்
ஒருவாசகமென் றுணர். என்று ஔவையும்,

செய்யாமொழிக்குந் திருவள்ளுவர் மொழிந்த பொய்யா மொழிக்கும் பொருளொன்றே என்று சங்கப்புலவராகிய வெ ள்ளிவீதியார் கூறியவாற்றானும் பிறவாற்றானும் நன்கறிகுதி. இன்னும், தேவாரதிருவாசகாதிகட்கு மறைத் திருநாமம்மேற் கூறிப்போந்த செய்யுட் பிரமாணமே போதிய சான்றாம் இஃ தன்றியும், ஆளுடையபிள்ளையார் திருப்பிரமபுரம் பண்-நட்டபா டை "திருநெறிய தமிழ்வல்வினை தீர்தலெளிதாமே" யெனவும் திருச்செங்காட்டங்குடி பண் பழந்தக்கராகம், கறையிலங்கு மலர்க்குவளைக்கண்காட்ட என்றதிருக்கடைக்காப்பிலே, செங்கா ட்டங்குடிசேர்ந்து மறையிலங்குதமிழ்வல்லார் வானுலகத்திருப் பாரே, எனவும் கூறியவாற்றானும் செவ்வனே விளங்குமென்க. இங்ஙனம், இத்தேவாரம் திருவாசகம் தமிழ்மறையே யென்பத ற்குப் பிறசான்றுவேண்டா. முன்னர் வேதாரணியமாகிய திரு

மறைக்காட்டில் வடமொழிவேதம் பூசித்து அடைத்திருந்த கத வினைப் பிள்ளையாரும் அரசுகளும் எழுந்தருளியபோது தமிழ் மறைப்பதிகங்களே திறந்து மீண்டுமடைத்தது. ஆகவே எத்திற வுகோல் எதனைப் பூட்டிற்ளே அத்திறவுகோலன்றி யப்பூட்டு விடாதென்பது உலகறிந்த வழக்கு ஆதலாலும், அழகிய திருச் சிற்றம்பலமுடையாரது அருமைத் திருக்கரத்தா லெழுதப்பட்டு ள்ளதாலும் என்றுணர்க.

மாண—தெரிந்தனன்; வடமொழி நான்மறையைச் சில்லோ ரும் தென்மொழிவேதமாகிய பாரதம், திருக்குறள், நால்வர் தே வாரதிருவாசகாதிகள், ஆழ்வாராதியர் அருளிச்செய்த நாலாயிரப் பிரபந்தம் என்னுமிவைகளைப் பல்லோரும் ஓதிவருகிறார்களென் றும், மொழி வேறுபாடேயன்றிப் பொருள் வேறுபாடின்றென் றும், இவ்விரண்டும் தம்முள் சமத்துவமேயென்றும் தக்க பிர மாணங்களோடு கூறிவந்தீர்கள்; மிக்கவறிந்தேன். இதுநிற்க; இங்ஙனம் வேதாதிகாரிகளாகிய வேளாண்மரபினர் பூணுநூல் தரித்துக்கொள்ளவேண்டிய விதியுமிருக்கவேண்டுமே! உளவா யின் அதற்குரிய சுருதிப்பிரமாணங்களை யெண்டெடுத்தோதுக.

# வேளாளர் பூணுநூற்றரித்தல்
## ஸ்மிருதி சம்மதி

ஆசி—சீட, மேற்கூறிய சதுர்வருணத்தாருள் முதன் மூன் றுவருணத்தார்க்கு முறையே பிராமணர் பருத்திநூல் முப்புரி யும், க்ஷத்திரியர் சணல்நூல் முப்புரியும், வைசியராம் வேளாளர் கம்பளிக்கயிற்றாற்செய்த முப்புரியுந் தரித்தல்வேண்டுமென கூற ப்பட்டுள்ளது.

பராசரம் 2-ம் அத்-39-ம் பக்கம் இருடிசிங்கமுனிவர்

அபிவாவாஸஸாயக்ஞோபவீததாரணங்
குர்யாத்ததபாவேத்திரிவிரதாஸூத்ரேண.
6.

ஆடையாலாயினும் பூணுநூலைத்தரிக்கலாம். ஆடை கிடை யாவிடத்து மூன்றிழை நூலாலாயினுந் தரிக்கலாமென்றேற்படு கின்றது. இவ்வணமே வேளாண்மரபினருள் பெரும்பாலார் ஆடையையே பூணுநூலாகக்கொண்டு உத்தரீயமாகத் தரித்துவ ரும் வழக்கமுள்ளது. அன்றி வைதிக கரும காலத்தும் கம்ப ளம், அல்லது சாலுவை, அல்லது நார்மடி இவைகளில் ஏதேனு மொன்றை அவசியம் உத்தரீயமாகத் தரித்தேவருகின்றனர்.

மநு (பராசரம் 2-ம் அத்-38-வது பக்கம்.)

கார்ப்பாஸமுபவீதம்ஸ்யாத் விப்ரஸ்யோர்த்வவிரதந்திரிவிரது
ஸாணஸூத்திரமயம்ராக்ஞோ வைஸ்யஸ்யாவிகஸூத்ரகம்

பருத்திநூல் வேதியனுக்கும், பட்டுநூல் அரசனுக்கும், ஆட் டுமயிர்நூல் வைசியனுக்கும் ஆகுமெனறு பைடீநசி கூறுகின் றூர்

கார்ப்பாஸமுபவீதம்ஸ்யாத் பிராஹ்மணஸ்யகௌஸேயம்
ராஜந்யஸ்யாவிகம் வைஸ்யஸ்ய

பருத்தி, பட்டு, பசுவால் மயிர், சணல், மரநார், வைக்கோல் முதலியவற்றுள் கிடைத்ததனல் பூணுநூல் செய்து இருபிறப் பாளர் எப்போதுந் தரிக்கலாம் என்று தேவலர் கூறினர்.

கார்ப்பாஸக்ஷௌமகோவால ஸணவல்கத்திரணுதிகம்
ஸதாஸம்பவதாகார்ய முபவீதம்திவிஜாதிபி:

என்றஸ்மிருதி வசனங்களால் நன்கறிகுதி

மா—சரியே, ஆயின்மேலே கூறியவண்ணம் இக்காலத்துள் சணல்நார், ஆட்டின் ரோமக்கயிறுபோல்வன எவருந் தரியா திருக்குங்காரணம்யாதோ?

ஆசி—வேதியர் முதலாயினோர் விதிப்படி மான்றோல் முத லிய போர்த்தலும், தண்டந்தாங்கலும் பிறவொழுக்கமும் கால வியற்கை யில்லாமை முதலிய பலகாரணங்களால் தவறியது போல வைசியருந்தவறினரென்க.

மாண—தேசிகோத்தம! மநு, தேவலர், காத்தியாயனர், கௌதமர், பிருகு முதலியோர்கள் மாத்திரம் பருத்திநூல்கொ

ண்டே பூணூநூல் தரித்தல் வேண்டுமென்றதென்னோ? அருளுக.

ஆசி—சீட, பெரும்பாலு முனிவர்குழாங்கள் ஆரணியவாசிகளாயிருந்ததால் அவர்கள்பால் வேதமோதும் மூவகைப் பிரமசாரியர் முதலியோர்க்கும் மற்றும் பிறவாச்சிரமத்தார்க்கும் ஆடைதேடுதல் முயற்சியுழைப்புநோக்கி, வைதிககருமகாலம் வீண்போகாவண்ணம் பருத்தி நூலும், போர்வைக்குத் தோலும், உடைக்கு மாவுரி நார்ச்சீலையுமாக விதித்தவாறென்க. இவ்வாறாக வைசியர் தரிக்கத்தக்கன கம்பளம் அல்லது சாலுவை இவ்விரண்டிலேதேனுமொன்றை நமது வேளாளசீலர்கள் தத்தம் வைதிககருமகாலங்களிலெல்லாம் தரித்தேவருகின்றார்கள் என்பது திண்ணம்.

---

# வேளாளர் பூணூநூல் சதா தரியாமைக்கு ஏது இவையாமெனல்.

---

இன்னும், வேளாளர் தக்கவிதிப்படி இவ்வுபவீததாரணத்தை விவாகத்துக்கு முன்பு ஒருக்காலும் செய்யாதொழிவதில்லை. பிராமணரைப்போன்று தாங்கள் எக்கியோபவீதத்தை யிடைவிடாமல் தரிப்பதில்லையே யென்ற பக்ஷத்தில் இவ்வேளாண் குடிமக்கள் பிராமணரைப்போலல்லாமல் வியவசாய முதலிய தமது லௌகிக கருமங்களால் கீழ் வகுப்பினரோடு பழகுதல் அடிக்கடி நேர்வதாலும், அப்பழக்கத்தால் தாந்தரிக்கும் எக்கியோபவீதத்திற்கு அபரிசுத்தம் சம்பவிப்பதாய் பாவித்து தற்காலத்திலோ அல்லது பூர்வத்திலோ சதா தரிப்பதைவிட்டு அதுதரிக்கும் கவுரவவிதி வழுவாது விவாகம், சீமந்தம், தருப்பணம், அந்தியேஷ்டி, ஆப்திகமுதலிய விரதாநுஷ்டான வைதிக கருமகாலங்களில் உபயோகப்படுத்துகிறார்கள். சாதாரணமாக லௌகிகானுகூலத்தினிமித்தம் ஓர் சுதந்தரப்பொருளை சிறிதுபோது விடுவதால் எப்போதும உபவீததாரணமில்லையென்பது சிறிதும் பொருந்தாவாம். ஆகவே வைசியராம் மூவகை வே

ளாண்மாக்களுக்கும் பூணுநூல் அதிகாரம் நிராக்ஷேபமான அம்சமென்றேயறிக.

மாண—ஐயா ஆரியமணியே! மேற்கூறிய உபவீத சம்ஸ்காரம் இவ்வாறென்று தெற்றென்றுணர்ந்தேன். இதுநிற்க இப்போது இந்நால்வகை வருணம்வந்தது தொழில்பற்றியோ, அல்லது பிறப்புபற்றியோ வென்று பெரியசந்தேகம் எனக்குள் நிகழ்ந்துள்ளதாகையால் தேவரீர் அதைப்பற்றி சற்று விவரித்துரைக்குமாறு பிரார்த்திக்கின்றனன்.

ஆசி—செந்நெலா லாய செழுமுளை மீட்டுமச்
செந்நெலே யாகி வளர்தலா—லந்நெல்
வயனிறையக் காய்க்கும் வளவய லூர
மகனறிவுதந்தையறிவு.

என்ற நாலடியானும், "மறப்பினுமோத்துக்கொளலாகும் பார்ப்பான், பிறப்பொழுக்கங் குன்றக்கெடும்" என்ற குறளானும் பிறவுநோக்கிப் பிறப்புபற்றியே வந்ததெனத்தெளிக.

மா—அங்ஙனமாயின் விஸ்வாமித்திரரும், கண்ணுவரும் அரசவகுப்பினராகப்பிறந்து பிறகு கருமத்தால் வேதியராயினரென்று பாரதம், விஷ்ணுபுராண முதலியவைகளிற் கூறிவருகின்றதே! இதற்குச் சமாதானமென்னோ வியம்புக.

ஆசி—ஜென்மநா ஜாயதே சூத்ர : கர்மணா ஜாயதேத்துவிஜ : என்பது பிறப்பாற் சூத்திரனும், கர்மத்தால் பிராமணனுமாவரென்று ஏற்பட்டிருப்பினும், ஈண்டெடுத்தோதிய இருபெருமுனிவர்க்கும், பிறப்பால் அரசர், சூத்திரர் எனவும் அந்நாற் பெருங்குலமாகிய வருணத்தினையே முன்புகூறிப் பின் தவத்தால் வேறு வருணம் வந்ததென்றே கூறியவாறன்றி, வருணமென்பதில்லாமலே பிறந்த பின்னர் செய்தகருமத்தால் வருணம் வந்ததென்று கூறுதல் அமையாதென்பாம். பிறவிநீய கருமசேடத்தால் வந்தவாறென்பதே வேதாகமங்கள் விதித்தவாறும்.

இன்னும் அவ் விஸ்வாமித்திராதியர் ஒரேபிறப்பில் வேதியராயினரென்பதும் அமையாது. எங்ஙனமெனில், அவர் வேள்

விப்பிரசாதத்தால் பிறப்பினையடைந்த இயர்க்கைச்சுத்தர். அந்தப்பிரசாதமோ, "அந்தணச்சேயேயாக" வென்று சங்கற்பித்த பிண்டமொன்றும், "அரசச்சேயேயாக" வென்று சங்கற்பித்த பிண்டமொன்றும் தம்முள்மாறி அரசமாதும் அந்தணமாதும் உண்டகாரணத்தால் பிறந்தவராதலின் அச்சங்கற்பவித்தின் மூலையாக அரசப்பிறப்பினராகிப்பின் தபோபலத்தினால் வேதியராயினரென்பதே திண்ணம்.

மா—அறிந்தனன், இதுநிற்க; மேற்கூறிய வைசியவகுப்பினராம் வேளாண்மையோர்க்கு உபவீததாரணம் ஸ்மிருதி சம்மதத்தான் விளக்கியருளினீர்கள். மற்றும் அவ்வுபவீததாரணஞ் செய்தற்குப் பிரதமகாலத்தை அடியேற்கருளுக.

## உபநயன விதி—மநு.

ஆசி—கர்ப்பாஷ்டமெப்தேசர்வத பிராஹ்மணஸ்யோபனயனம்
கர்ப்பாதேகாதஸேராக்ஞோ கர்பாத்து துவாதஸேவிஸ:

என்ற சுலோகத்தால் வேதியர் எட்டாமாண்டிலும், க்ஷத்திரியர் பதினொராமாண்டிலும், வைசியர் பனிரெண்டாமாண்டிலும் பூணுநூற்றரித்தல் முறையென்பதாம்.

பிர்ஹ்மவர்ச்சஸகாமஸ்ய கார்யம்விப்ரஸ்யபஞ்சமே [மே
ராக்ஞோபலார்த்திஷ்ஷஷ்டேவைஸ்யஸ்யே ஹார்த்தி னோஷ்ட

என்ற சுலோகத்தால், பிரமவொளிவிரும்பின வேதியர் ஐந்து வயதிலும், பலத்தை விரும்பின அரசர் ஆறுவயதிலும், பொருளை விரும்பின வைசியர் எட்டுவயதிலும் உபநயனஞ் செய்துகொள்ளக்கடவன் என்பதாம்.

ஆஷோதஸாத்பிர ஹ்மணஸ்ய ஸாவித்ரநாதிவர்த்ததே
ஆத்வாவிம்ஸாத்க்ஷத்ரபந்தோர்சதுர்விம்ஸ்தேர்விஸ:

என்ற சுலோகத்தால், பிராமணர் பதினாறுவயதினளவும், க்ஷத்திரியர் இருபத்திரண்டுவயதினளவும், வைசியர் இருபத்துநான்கு

வயதினளவும் உபநயனகாலமாகவுங் கொள்ளலாமென்றும் ஏற்படுகிறது. [இதனால் மேற்கூறிய உபநயனகாலத்தைப்பற்றிய மூன்று சுலோகங்களும் காலவரைவித்தியாசமாகக் காணப்படலால் உத்தமம், மத்திமம், அதமம் என முத்திறவகையாற் கூறினர்போலும்.]

மா—அறிந்தனன். இதுநிற்க; மேற்கூறிய நான்குவருணத்தார்க்கும் ஆசூசவிதியைப்பற்றிச் சுருதி பூர்வமாயருள்வீராக.

## ஆசூசவிதி—மநு.

ஆ—ஸுத்யேவிப்ரோதஸாஹேந த்வாதஸாஹேநபூமிப:
வைஸ்யபஞ்சதஸாஹேந ஸுத்ரோமாஸேநஸுத்யதி

என்ற சுலோகத்தால் பிராமணர் 10 நாளிலும், க்ஷத்திரியர் 12-நாளிலும், வைசியர் 15 நாளிலும், சூத்திரர் ஒருமாசத்திலும் ஆசூசநீங்கிச் சுத்தராவர்.

மேற்கூறிய நான்குவருணத்தவர்களில் 3-ம் வகுப்பினராய வைசியவேளாண்மாக்கள் சூத்திரரேயானால் முக்கியமாய் இம்மைமறுமைப்பிரையோஜனங்களுக்கு ஏதுவாகிய எல்லா வைதிகலௌகிக கருமங்களுக்கும் கருவியென்று சொல்லப்படும் வேதாகமபுராணம், உபநிஷத்து,வேதாங்கம், என்பவைகளை முறையே ஓதலாகாது. அங்ஙனம் ஓதாதுவிடவே நல்லறிவின்மையான் ஒழுக்கங்கெடும்; அதுகெடவே ஷ்ட் கருமங்கள் நடவாதாகும்; அது நடவாதாகவே இருமைப்பயனும் ஒருங்கேகெடும் அது கெடவே பாவம் வளரும். ஆகவே தானமுதலியனவும் கடனறிந்து செய்யவேண்டுதலின் வேதாதியோதல் ஒருதலையாய் வேளாண்மாந்தரது முக்கியதருமமெனவும், இவர்களே வைசியரெனவும் நிராடங்கமாய் விளங்கிற்று.

மா—மேற்கூறிய மூவருணத்தார்க்கும் வேதாதிகாரங்கூறிச் சூத்திரர்கட்கு அஃது கூறாமையென்னோ வியம்புக.

ஆ—சூத்திரராவார் மூவரேவலாற்றுதலான் முயற்சியுழைப் பிற்சிரமநோக்கியும், கரணவுழைப்பிற்குக் காலமின்மையானும், கற்புடைமாதரார்க்குக் கணவனே தெய்வமாதல்போல மேல்வருணத்தாராய மூவரேவலையும் முறையே புரிந்தொழுகலான் இருமைப்பயனுமுளராகலானுமே வேதாதிகாரிகளாய் விதிக்கப்படாமைகாண்க.

மா—அறிந்தனன்; இவ்வாறாக வருணாச்சிரமங்களை நான்கு வகையான் பிரிக்கப்பட்டமைக்குப் போதுமான காரணம் காட்டுவீர்களாக.

ஆ—சிட! கூறுவேன் கேட்பாய்:—எல்லாம் வல்லவிறைவனது படைப்பினுள்ளகப்பட்ட அநேகமான வேறுபாட்டு தேகபோகத்தோடுங்கூடிய பிறப்பினவாய ஆன்மகோடிகளுள் மனிதர் அறிவு, தொழில், அநுபவிப்பு முதலிய சிறந்த காரணத்தால் பகுத்துக்கொள்ளுதலோடு அடங்கவுமிருத்தலால், மிருக முதலியன அடங்குதலினாலும் அடக்கப்படுதலினாலும் உண்டாகும் பயன் காக்ஷியளவையது. அதுபோலவே உயர்ந்ததென்று விளங்கப்பட்டதான மனிதப் பிறப்பையுடைய மக்களுள்ளும் அடக்குவாரும் அடங்குவாருமாகவேயிருப்பது எல்லாலௌகிக வைதிககருமங்களுக்கும் அநுகூலமும் க்ஷேமமும் பிரையோஜனமுமாகவிருக்கின்றது என்பதை, அரசு, குடி, கற்றோர், கல்லார், உபாத்தியாயன், மாணாக்கன் உடையவன், எளியவன், ஏவுவோன், செய்பவன், ஆண்பால், பெண்பால் எனவும், புண்ணிய பாவமும் போலத்தொழிலுள்ளும், மேல்கீழென இடத்துள்ளும் முன்பின் எனகாலத்துள்ளும் பிறவற்றுள்ளும் வழங்குவன பலவாறுபோல பூர்வஜென்மகன்மப்பயனாக ஜாதி, மதம், தொழில், சுகம், துக்கம் முதலியனவும் வாய்த்ததெனத் தெளிவாயறிக.

மா—தேசிகோத்தம! தேவரீர் திருவாய் மலர்ந்தருளிய பன்னூற்பிரமாணங்களாலும், பிரமாணக்கர்த்தர்களாம் நல்லாசிரியர்களின் எண்ணடங்காப் பெரும்புகழாலும், வைசிய வேளாளரைக்குறித்த இவ்வரிய விஷயசூசனங்களையெல்லாம் சாங்கோபாங்கமாக எளியேற்கு எடுத்தோதியருளிய தேவரீரது கிருபாவிசேடத்தாலும், நம் வேளாண்மாக்கள் வைசிய வகுப்பினரே

யெனச் செவ்வனே விளங்கிக்கொண்டேன். இனிச்சிற்றறிவும் சிறுதொழிலும்வாய்ந்த நாயினேன் வேண்டு கோட்கியைந்து ஆங்காங்கு பலவாறு நேர்ந்துள சந்தேகவிபரீதங்களை மயக்கற விளக்கியருளிய தேவரீரது பெருமையை யெங்ஙனமறிந்து எவ்வாறு துதிப்பேன். ஆகலின் எல்லாம் வல்ல எம் பரமகருணாநிதியாம் பரமேஸ்வரனருளால் பல்லாண்டுவாழப் பன்முறையும் பிரார்த்திக்கின்றேன். தேவரீரது திருவடிக்கமலங்களுக்கு நமஸ்காரம். நமஸ்காரம்.

ஆ—எத்திற நன்மை தீமைகட்கும் ஒத்த காரணமொன்றிருக்க, வேறுசில கூறுவது அறியாமையும் திரிபுணர்ச்சியுமாம். ஆகவே இவ்வருணாசிரம தருமமுறைகளை அறிவுடையோர் பலராலும் முற்காலத்தும் பிற்காலத்தும் விரித்துரைத்த நூல்கள் பலவற்றால் "எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பதறிவு" என்ற மெய்ம்மொழிப்படித்தாய் தத்தம் வருணாச்சிரமதருமங்களை நன்குணர்ந்து அறம் பொருளின்பம் வீடென்னும் புருஷார்த்தங்கள் நான்கையுந் தேடியனுபவிப்பதே முறையாமெனக்கொண் டொழுகுவாயாக.

**வேளாள சூளாமணி**

முற்றிற்று.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

கவிச்சக்கரவர்த்தியாம் கம்பராற்செய்யப்பட்ட

## வேளாளரது

# திருக்கை வழக்கம்.

### கலிவெண்பா.

கங்கை குலந்தழைக்கக் காட்டும் பெருங்கீர்த்தி
மங்கை பிரியாமல் வாழுங்கை—திங்களணி
எம்பிரா னெம்பெருமா னிந்த்ராதி பார்க்கரிய
தம்பிரா னுக்குழைத்த சந்தனக்கை—யம்பொன்
வளைவாரி வையகமும் வானகமும் போற்ற
முளைவாரி வந்த முழுக்கை—கிளைவாழக்
கச்சித் தலத்தானைக் கல்லா லெறியமறந்
தெச்சிற் றயிர்ச்சோ றெறிந்திடுங்கை—பச்சைமிகு
தேமா வடுக்கமரிற் சிந்திற்றென் றேகழுத்தை
யாமா மெனவே யரிந்திடுங்கை—வாமமறை
ஓதுபுகழ் நாயனுட னூரன் புரமென்றே
மோதுகடி கொண்டு முடுக்குங்கை—தீதகல
அஞ்செழுத்தே யொன்றாகி யப்பரெனத் தோன்றியரன்
செஞ்சரணத் தேபூசை செய்யுங்கை—வஞ்சியர்பால்
தூதரனைத் தான்விடுத்த சுந்தரனைக் காணமற்
பேதமறத் தன்வயிறு பீறுங்கை—பூதலத்தின்
மிக்க புலவனுக்கா வேசிமனை மட்டாகத்
தக்க சிவிகைதனை தாங்குங்கை—மைக்கடுவாய்
மூக்கிற் புகைபுரிந்த மூதரவின் வாயிடத்து
நீக்கியகை நாக்கதனி னீட்டுங்கை—யாக்கமுடன்

ஏதமற்ற கீர்த்தியைக்கொண் டேட்டகத்தி லேயடிமைச்
சாதனமிட் டேகொடுத்த தங்கக்கை—மேதினியிற்

சூலி முதுகிற் சுடச்சுடவப் போதுசமை
பாலடிசி றன்னைப் படைக்குங்கை—சாலவே

நாணந் தராம னடுங்காமற் கூசாமற்
பாணன் பிணத்தைப் பரிக்குங்கை—காணவே

தண்டமிழோன் றன்மனத்திற் சந்தேகந் தீரக்கூழ்
உண்டவயிற் றைப்பீறி யூற்றுங்கை—கண்டளவில்

நீலிதனக் கஞ்சி நின்றவணி கேசனுக்காக்
கோலி யபயங் கொடுக்குங்கை—யாலமெனும்

வன்னி யிடைமூழ்கி வானோர் பழிகழுவிக்
கன்னிதனை யேமணந்த காட்சிக்கை—துன்னுமொரு

பேருலகை யெல்லாம் பிழைப்பிக்கு மோர்கொழுவின்
கூரிலொரு வன்கழுத்தைக் குத்துங்கை—பாரறிய

வீறு பெரும்பறையன் வீயாம லோர்கலத்திற்
சோறுபிசைந் துண்ட சுடர்மணிக்கை—யாறுத்

தொடையி லெழுசிலந்தி தோற்றுவிக்கப் பட்டின்
புடவை கிழித்த பெருங்கை—கடல்சூழ்ந்த
பார்பூட்டு மன்னர் பரிகரிபூட் டக்கதிரோன்
றேர்பூட்ட வேர்பூட்டுஞ் செம்பொற்கை—வீரமதன்
ஐங்கோ லொருக்க வணைகோ லொடுக்கவுழும்
பைங்கோல் பிடிக்கும் பதுமக்கை—யிங்கிதமாஞ்
சீர்படைத்த பூபாலர் செங்கோல் பிடிப்பதற்குப்
பேர்படைத்த மேழி பிடிக்குங்கை—கார்படைத்த
மிஞ்சுமதி கீர்த்தியைப்போன் மேதினியெல் லாந்தழைக்கச்
செஞ்சாலி நாற்றைத் தெளிக்குங்கை—யெஞ்சாமல்
வெள்ளைக் களைகளைந்து வீறும் பயிர்தழைக்கக்
கள்ளக் களைகளைந்த கற்பகக்கை—வள்ளுறையும்
விற்போர் மதகரிப்போர் வெம்பரிப்போர் வெற்றிப்போர்
நெற்போர் முதற்போர் நெரித்திடுங்கை—கற்பகம்போன்

மேழிக் கொடிசிங்க வெற்றிக் கொடிகுயிலின்
வாழிக் கொடியே மருவுங்கை—நீளுலகில்

ஆதுலர்க்குச் செம்பொ னளிக்குங்கை யாகமங்கள்
வேத புராணங்கள் விரிக்குங்கை—நீதிநெறி

மானங் குலங்கல்வி வண்மை யறிவுடைமை
தானந் தருமந் தழைக்குங்கை—யானதமிழ்

கல்லார்க ளென்னுமற் கற்றோர்க ளென்னுமல்
எல்லாரை யுங்காத்தீ டேற்றுங்கை—வல்லமைசேர்

மைம்மா முகிலுலகை வாழ்விக்கு மேன்மைபோற்
கைம்மா றிலாதளித்த கற்பகக்கை—சும்மையார்

ஊருணி நீர்போ லுலகத் தவர்க்கெல்லாம்
பேரறிவா லீயும்ப்ர தாபக்கை—பாரில்

உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே
கொடுக்க விசைந்த குளிர்க்கை—யிடுக்கணினுன்

மாமறையோர் மன்னர் வணிகர் முதலாகத்
தாமலையா மற்கொடுத்துத் தாங்குங்கை—தேமருவு

நாவிற் புகழ்கம்ப நாடற் கடிமையென்றே
மாவைக் கரைத்துமுன்னே வைக்குங்கை—பாவலர்தாம்

ஏரெழுப தோதியரங் கேற்றுங் களரியிலே
காரிவிட நாகங் கடிக்குங்கை—பாரறியச்

சங்கையிட்டுத் தள்ளாமற் றன்சோற்றை வந்தவர்க்குப்
பங்கையிட் டிரட்சித்த பங்கயக்கை—பொங்கமொடு

செம்பொன் விளைகளத்தூர் செந்நெல் விளைந்ததனை
நம்பிமறை யோர்க்களித்த நாணயக்கை—யெம்பொன்

விளைபயிரைப் பார்த்து விரைகால் புலத்தை
வளையமதி லிட்டு வருங்கை—களமதனில்

ஏற்கவந்த வாதுலருக் கில்லையென்னு மற்செம்பொன்
கார்க்கையினுன் முக்கையிட்ட கற்பகக்கை—தீர்க்கமதாத்

திருப்பருத்திக் குன்றிற் சிவனு லயங்கள்
விருப்புடனே கட்டுவித்து வீறுங்கை—திருப்புகழை

எண்ணை யெழுத்தை யிசையை யிலக்கணத்தை
வண்மைபெற வுண்டாக்கும் வாகுளகை—பண்ணமைந்த
வேதமொரு நான்கினையு மிக்கதமிழ் நாலடியால்
ஓதியுரைத் தேகருணை யோங்குங்கை—பூதலத்திற்
பாவல னெச்சிற் படுமாங் கனியையெடுத்
தாவலுட னன்று வருந்துங்கை—காவலவன்
மண்ணிற் கடலின் மலையிற் பெரியதென
எண்ணியெழு திக்கொடுத்த வேற்றக்கை—திண்ணமதாய்
வையகமெங் குந்தேடி வந்ததமி ழோன்புகழச்
செய்யமுடி யைக்கொடுத்த செம்பொற்கை—துய்யபுகழ்
அட்டதிக்கு மெண்கீர்த்தி யாயிரத்தெட் டானைதனை
வெட்டிப் பரணிகொண்ட வீரக்கை—திட்டமுடன்
பொன்னு லமுதும் பொரிக்கறியுந் தான்கொணர்ந்து
நன்னு வலர்க்களித்த நாணயக்கை—முன்னாள்
மனக்கவலை யுற்ற வணிகன்முன்னே நின்று
தனக்கா வெனக்கேட்ட தங்கக்கை—கனக்கவே
அன்றீன்ற நாகெழுப தானவெரு மைத்திறத்தைக்
கன்றோடு நல்குங் கடகக்கை—வென்றிதரும்
ஓரானை நூரா யிரக்கலநெல் மேலோர்கவிக்குச்
சீராக நல்குந் தியாகக்கை—பேரியலைச்
சாற்றுமொட்டக் கூத்தன் சரசகவி சொல்லப்பா
லாற்றுநீர் காற்கொணர்ந்த வாண்மைக்கை—கீர்த்திபெற
வண்டமிழோன் றனுதைத்த வாகுளகா லுக்குப்பொன்
வெண்டயமிட் டேவணங்கும் வெற்றிக்கை—புண்டரிகக்
கையாற் புலவன் கனக்குடுமி மேற்குட்டச்
செய்யாழி பண்ணியிட்ட சீரக்கை—நொய்ய
எறும்புக்கு மாப்பதந்தா னில்லையென்ற மட்டிற்
றிறம்புக்க யானைதருஞ் செங்கை—பறம்புதனில்
எண்ணு யிரமுனிவர்க் கேற்றபடி யப்படியே
பண்ணுக் கொடுக்கும் பராக்ரமக்கை—விண்ணுடர்

கூர்த்தபுக முண்ட கோளமளவும்படர
நாற்றிக்கு மேருவினி னுட்டுங்கை—சீர்க்குகனை
ஆதாரமானவனை யைங்கரனைச் சங்கரனைப்
பாதார விந்தம் பணியுங்கை—நீதி
நடக்கை யிருக்கை நகைக்கை மிடிதீர்க்கை
கொடுக்கை செழுங்கை குளிர்க்கை—தொடுத்ததெல்லாஞ்
சீராக வுண்டாக்குஞ் செங்கைப் பெருங்கருணைக்
காராளர் கற்பகப்பூங் கை.

திருக்கை வழக்க முற்றுப் பெற்றது.



அழுங்குழவிக் கன்புடைய தாயேபோ லனைத்துயிர்க்கும்
எழுங்கருணைப் பெருக்காள ரெளியரோ யாம்புகழ
உழுங்கொழுவிற் கருவீழி யுலகமுதற் கருவாகச்
செழுங்கமலத் தயனிவரைச் செய்துலகஞ் செய்வானேல்

வேதியர்த முயர்குலமும் விறல்வேந்தர் பெருங்குலமும்
நீதிவளம் படைத்துடைய நிதிவணிகர் தங்குலமுஞ்
சாதிவளம் படைத்துடைய தாயனைய காராளர்
கோதில்குலந் தனக்குநிக ருண்டாகிற் கூறீரே.

வாழ்த்து.

பார்வாழி நான்மறைநூற் பருணிதரா குதிவாழி
கார்வாழி வளவர்பிரான் காவேரி நதிவாழி
பேர்வாழி பெருக்காளர் பெருஞ்செல்வக் கிளைவாழி
ஏர்வாழி யிசைவாழி யெழுபத்தொன் பதுநாடே.





உ

வேலுமயிலுந்துணை.

சுவாநுபூதி மகானொருவரால் செய்யப்பட்டு
இதுவரையில் அச்சிடாதிருந்த

## சமரபுரி சண்முகர்

# பஞ்சாத்நம்.

---

### பதினாறடி ஆசிரிய விருத்தம்.

சீர்கொண்டவகிலபிர்மாண்டநாயககோடி திவ்யசூர்யப்ரகாசா
தேவதிருப்திப்ரசாதாவுஜிதாஸவசன ஸ்ரீகுலிசன்மகள்சமேதா
சீவசயகயிலாசகிரியார்ஜிதாகனவி சித்ரபீடாரோஹணா
ஜெயவகண்டிதவலங்கிருதகிருபாநேத்ரசதுர் வேதசாஸ்த்ராதிதோத்ரா
கார்கொண்டசூதகர்ச்சூரமந்தாரகன கதலியிட்சுவனதேசா
கமழ்பாரிஜாதமல்லிகைவகுளசண்பகா ரம்புனைகடம்புவாசா
கற்பூரதீபநீராஞ்சனாப்ரமதகண கண்டிதாகண்டிதகுணா
கனகமயமிருகமததிர்தோன்னதகுஜாசல களிப்புணமடந்தைநேசா
ஏர்கொண்டதும்புருநாரதசித்தவித்யா தார்க்கெழுங்கீதநாதா
ஏகாங்கவேதநாதாந்தயோகாங்கஜன ஹிருதயபூர்த்திப்ரசன்னா
இந்திராக்னியமநிருதியஷ்டவசுரக்ஷகா ஹிமயபர்வததவுஹித்ரா
இபவதனசுமுகசோதரசிரேஷ்டசப்தரிஷி யேகசாஷ்டாங்கபாதா

தேர்கொண்டமணிநீலகண்டப்ரசண்டவடல் திரிபுராந்தகுமாரா
திரிலோககாருண்யமூர்த்தியாநந்தநிச தரிசனமெனக்களித்தாள்
சின்மயாநந்தகுருதெய்வமேயெனதின்ப சிந்தைகுடிகொண்டபரனே
ஜெகமெயடியவர்பெருகமகிழ்முராஹரியின்மருகதிகழ்சமரபுரிமுருகனே.(க)

வேதவேதாந்தப்ரமாணசிலாக்யவாக்ய வெகுமுக்யப்ராக்கியாதிபன்
மிகுமகோத்தமசங்கதுங்கப்ரசங்கநி சங்கவிதரணிகலிங்கன்
மித்ருகாத்தவ்யசாக்ஷாத்காரமோக்ஷவீ க்ஷண்யபூரணகடாக்ஷன்
வித்தகர்பெறும்ப்ரயோஜனவலங்கிருதபஞ்ச வித்தருதம்மரசுதருமன்
நாதநாதாந்தத்ரிகுணரஹிதகேவல க்யானநாஞவிநோதன்
நடனரமணியகளினகமலசாஞற்புத நயாமிர்தகுஞபிஷேகன்
நவரத்னஹாரகேயூரகுண்டலகடக கங்கணநவபூஷணன்
ராஜராஜாங்கயோகாப்யாஸவாசிநடு நாசியிடையெழுமுலாசன்
தாததாதாவெனத்தஞதத்தளங்குததிங் கணநிர்த்தஜரிதமயிலன்
சடச்சடசடாக்னிதேகன்குளிர்வாதச தசசததளாம்புயாக்ஷன்
சண்டப்ரசண்டநிர்த்தண்டமிண்டப்ரளய தாருகாசூரகண்டன்
சரவணேற்பவநித்தியாநந்தமூர்த்தியென் சஞ்சலமகற்றிஞான
சீதசீதளபூர்ணமதிமண்டலச்செழுந் தேன்மடைதிறந்துண்டுளந்
தேக்கிட்டடர்பெரும்பசிநீக்கிமௌனச் செருக்குற்றுலாவுகாணச்
சேட்டையற்றருளின்பவீட்டினுட்டத்தையென் சிந்தைகுடிவைத்தநிபுணன்
ஜெகமெயடியவர்பெருக மகிழ்முராஹரியின்மருகதிகழ்சமரபுரிமுருகனே.()

ஹராஹரமகர்தேவகெம்பீரசரவண பவாயசமஞெளிபவாய
ஐயுமோங்கிலியும்றீயும்ஸ்ரீயும் ஆங்கார ஹிரீங்காரகிரீட
வதிகாரமிகுசூராதிபாரதளகோர வமராதிபதிதீரமா
வரியேறுநவவீரர்பணியாறுமுகவீறு மயிலேறிவருமேருவே
பரிபுரபவாயநமபவஞெளிபவாயவோம் பாலாம்பிகாகுமாரா
பஞ்சாக்ஷரவகரஉகரஓங்காரபரி பூர்ஞக்ருபதியதுல்ய
பரமண்டலத்தகத்தாயபீதாம்பரலங்கிருதபன்னிருபுயதயா
பகவதேசுப்ரமண்யாஸ்தூலசூக்ஷமகாரணபக்தஜனரக்ஷகா
திரிபுரபவாயநமதிகழொளிபவாயஓம்செழுநீதியநுபூதிநம்
சிவபோதமலர்வேதனறியாதபொருளாதிதிறமோஞகுருநாதனே
ஜெயமூலபீஜாக்ஷரப்ரதாபாதிவ்யதேஜோன்மயாகுஹாயா
சிற்புவனேகட்கசட்கோணசக்ராலயத்தெழுசடாக்ஷரசொரூபா
தெரிவையர்கடொழுகுறநினெழின்மகிழ்வடரெனதுதிமிரநடமிமனதைநி
திருவடியையனவரதநினைவுகொடுவினவுதுதிசெயதயவுசெயுமதிசயா [யும்
ஜெயவிஜயமுதியபரசிவசமயமாமகிலதிசையிலத்வைதமணியே
ஜெகமெயடியவர்பெருகமகிழ்முராஹரியின்மருகதிகழ்சமரபுரிமுருகனே.(௩)

ஆதிமுருகன்பிரமதேவைசிறைவைத்தமெய்ஞ்ஞானமுருகன்விநோத
வைங்காற்கிளையமுருகன்புகழ்திருக்கைமச்சாவதாரஞ்செய்முருகன்
அடர்திணைப்புனமதனில்வேங்கையுருவாமுருகனருமைகுறவள்ளிமகிழ
ஆண்டிக்கிழச்சொரூபமானமுருகன்சரவணத்தடமமர்ந்தமுருகன்

பாதிமதிவேணியற்கோதுமுருகன்சமணர்பகையறுத்திட்டமுருகன்
படருமயிலைப்பதியிலங்கத்தையும்பூம்பாவையுருவாக்குமுருகன்
பரலோகசுரலோகமுருகனெனதிராகவெனைபாராதிடத்தினிந்தை
பகரொனதுசத்ருசம்ஹாரமுருகன்மித்ருபக்ஷத்தமர்ந்தமுருகன்

தாதவிழ்கடம்பணியுமுருகனிந்திராணிமகடன்னைப்புணர்ந்தமுருகன் [கன்
தணியாவினன்குடிகொள்முருகனென்குறைதவிர்த்தாளுவடிவேலுமுரு
சச்சிதாநந்தமுருகன்கௌரியருள்பனிருதண்டோள்விளங்குமுருகன்
தமிழோதுநற்கிரனொருபோதுபெறும்வாதுதனைதவிர்த்தாண்டமுருகன்

நீதிலாதற்புதந்தருமுருகன்மந்திராதீனகர்த்தவ்யமுருகன்
சிவமுருகன்மகிழினியதவமுருகன்மதிவதனசெயகார்த்திகேயமுருகன்[கன்
செஞ்சொல்முருகன்வனச்செங்கைமுருகன்றிருச்செம்பொன்மயிலேறுமுரு
ஜெகமெயடியவர்பெருகமகிழ்முராஹரியின்மருகதிகழ்சமாபுரிமுருகனே.(ச)

உதிக்கின்றகர்ப்பமொருநாள்சுக்கிலச்சுரோணிதவிதமிரண்டுங்குழைந்
தொத்துநீர்க்குமிழியாமைந்துநாளிற்றிரண்டோரொழுதினங்கடெதா
மொன்பதிற்பனிரண்டின்மிளகுசுண்டற்காயுறும்பத்துமூன்றினெல்லி
யொக்குமொருபக்ஷமெலுமிச்சைபதினேழிலாமுருள்விளங்காயிருபதில்

விதிக்குமிருபத்தெழுதினங்கிண்ணியாமாமைமெய்யர்கநாண்முப்பதில்
விஷயங்களுங்கழுத்துந்தோளுமுண்டாகுமிருமாதமறைபுறங்கால்
மேவுமூன்றிற்சந்துவிரல்களாம்நாலின்முகமுண்டாய்விளங்குமைந்தில்
வியநாசிசெவிபாறில்நகமேழிணெழுபத்தீராயிரநரம்புதிரமும்

மதிக்குநாபிச்சலமலத்வாரமாமெட்டில்மகிழன்னையுண்டசார
மதுநாபிவழிசென்றுடம்பிடுவத்தில்வருமறிவுமிகுவிதனவேதை
வாதைதவிட்டருளின்பவீடுபெறவேண்டுமேல்வருபத்துமாதத்திவிம்
மாநிலந்தன்னிற்பிறந்தறிவழிந்துசலமலமளைந்தரைதவிழ்ந்து

திதிக்குள்வளர்மதியெனவளர்ந்தோடியெங்குந்திரிந்துகாளைப்பருவமாய்த்
தீயமடவார்க்கடிமையாளனுய்ச்சஞ்சலத்தீக்குழிபடுங்கொடியவென்
சித்தமதகற்றிசிவபத்திசெயவைத்ததுடிசிற்றிடைகுறத்திமகிழ்நா
ஜெகமெயடியவர்பெருகமகிழ்முராஹரியின்மருகதிகழ்சமாபுரிமுருகனே

பஞ்சரத்ந முற்றிற்று.

